உ

# ஆனந்தபோதினி

ஒரு சிறந்த மாதாந்தத்
தமிழ்ச் சஞ்சிகை.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

(தொகுதி 22.)

தாது௵ ஆடி௴ முதல் ஈசுவர௵
ஆனி௴ வரையில்
1936௵ ஜுலை௴ முதல் 1937௵ ஜுன்௴ வரையில்

நா. முனிசாமி முதலியார்,
"ஆனந்தபோதினி" ஆபீஸ்,
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



காலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0 | 1937. | தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "Ananda Bodhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*
THOTTAKADU HOUSE. } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, and Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini**." It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd.) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini,**" containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15.*

---

Dear Sir,

Your Tamil monthly entitled "**ANANDA BODHINI**"........................is written in *easy*, *clear* and *readable* style, *well-suited*, *particularly*, to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes, ... ... ... ... ... Itis very much to be envied that there should be over 10000 subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

**Trivandrum,**
**21-1-17.** } **A. V. SUBRAMANIA AIYAR,**
**F.N. S.A. (Lon.), F.C.I. (Birm.)**

# ஆனந்தபோதினி

## 22-ம் வருடத்திய விஷய அட்டவணை.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | தாது ௵ ஆடிமீ ௧௳ | பகுதி |
|---|---|---|
| 22 | 1936௵ ஜூலைமீ 16௳ | 1 |

## கடவுள் வணக்கம்.

தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான்
ஞானமெனும் தன்மை பேச
உன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே
அதனையுன்னி உருகேனையா
வன்னெஞ்சோ விரங்காத மரநெஞ்சோ
விருப்புநெஞ்சோ வைர மான
கன்னெஞ்சோ வலதுமண்ணாங் கட்டிநெஞ்சோ
எனதுநெஞ்சங் கருதிற் றேனே. (1)

கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையாது
யானெனும் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலாது
உள்ளன்பு விடாதே
அடுக்கின் றோர்களுக் கிரங்கிடும்
தண்டமிழ் அலங்கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா
ததுபரஞ் சோதி. (2)

சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென அறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலின் நிற்றியேல்
வீட்டறந் துறவறம் இரண்டு மேன்மையே. (3)

வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள், சூழ வந்தருள் தோற்றமும் சோபனம்
ஆழி போலருள் ஐயன் மவுனத்தால், ஏழை யேன்பெற்ற இன்பமும் சோபனம்.

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் தமது மனம் உருகாத்தன்மையைக் கூறுகின்றார்.

(இ-ள்.) ஐயனே, மனமானது தன்கண்ணுள்ள எண்ணங்கள் நீங்காத அறிவிலியாகிய அடியேன் ஞானம் என்று சொல்லப்படுகின்ற தன்மையினை எடுத்துப் பேசும்படி தேவரீர் மனம் மகிழ்ந்து ஒரு மொழியைப் போதித்தனையே, அம்மொழியினை நினைந்து உருகமாட்டேன். ஆதலால் எண்ணுமிடத்து அடியேனது மனமானது வன்மனமோ, இரக்கமில்லாத மரமனமோ, இரும்பு மனமோ, வைரம் பற்றிய கல்மனமோ அல்லது மண்ணாங்கட்டி மனமோ அறிந்திலேன் என்க.

ஞான விவகாரஞ் செய்தற்குரியார் அறிஞரே ஆவர். அங்ஙனமாக அறிவிலியாகிய நான் அத்தகைய ஞான விவகாரம் செய்யும் வண்ணம் ஒரு சொல்லால் திருவருள் புரிந்தும் அவ்வுபகாரத்தினை நினையாத ஏழையேன் நெஞ்சம் கல் மண் முதலியவற்றிற்குச் சமமே என்பார் "வன்னெஞ்சோ................................மண்ணாங்கட்டி நெஞ்சோ" என்றனர்.

2. இதனால் இறைவன் எத்தகையாருக்கு அருள்புரிவார் என்பதைக் கூறுகின்றார்.

(இ-ள்.) தண்டமிழ் மொழிகளாலாகிய மாலைகளைத் தொகுத்துச் சாத்துகின்ற அடியார்களைச் சோதனை செய்யாததாகிய பராஞ்சுடரானது கொடையாளரிடத்துக் குற்றம் பாராட்டாமலும், யான் என்னும் குதர்க்கத்தினை விடுப்பவரிடத்து நீங்கியிராமலும், மனத்தினிடத்து அன்பு நீங்காமல் அடுக்கின்றவர்களுக்கு இரக்கங் காட்டியும் அருள்வான் என்க.

தருமவான்களிடத்தும், அகங்காரமற்றவரிடத்தும் அன்புடையாரிடத்தும் முதல்வன் கிருபை செய்தருளுவான் என்பார் "கொடுக்கின்றோர்கள் பால்..................இரங்கிடும்" என்றார்.

3. இதனால் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டும் மேன்மையாமாறு கூறுகின்றார்.

(இ-ள்.) மனமே! கயிற்றினலாட்டப்படுகின்ற பம்பரக் கூட்டங்கள் போல் எல்லா உயிர்களையும் முதல்வன் ஆட்டுவிப்பான் என்று தெரிந்து, கவலை ஒன்றுமில்லாது, திருவருட் செய்கைக்கு உட்பட்டு நிற்பையாகில் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டறங்களும் மேன்மையுடையனவே ஆகும் என்க.

4. இதனால் வாழ்த்துக் கூறுகின்றார்.

(இ-ள்.) அடியேன் பாடும் சோபனமானது வாழ்க. நன்மை செய்யும் அடியார்கள் வாழ்க. அடியேனைச் சூழுமாறுவந்து கிருபைபுரிந்த திருவருள் தோற்றமும் வாழ்க. கடல்போல் அருளுடை ஐயன் மௌன குருவின் உபதேசத்தால் எளியேன் பெற்ற இன்பமும் வாழ்க என்க.




# "ஆனந்தபோதினி"யின் 22-வது ஆண்டு





எல்லாம் வல்ல இறைவன் திருவருளாலும், செந்தமிழ்ச் செல்வர்களாகிய சகோதரி சகோதரர்களின் பேராதரவாலும் நமது "ஆனந்தபோதினி"க்கு 21-வது ஆண்டு இனிது நிறைவுற்று இந்த ஆடிமீ 1-ம் தேதி முதல் 22-வது ஆண்டு பிறந்திருக்கிற நற்செய்தியை எல்லாருக்கும் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றோம். போதிய பத்திரிகாபிமானம் இன்றிப் பொருளாதார நெருக்கடியும் மிகுந்துள்ள இக்காலத்தில் குறைந்த சந்தாவில் "ஆனந்தபோதினி" போன்ற மாதச் சஞ்சிகை இருபத்தொரு ஆண்டுகள் நின்று நிலவி 22-வது ஆண்டில் சிறப்புடன் வெளிவருவது எவ்வளவு அருமை என்பதை நேயர்கள் சற்றே சிந்தித்துப் பார்க்கவேண்டும். குறைந்த சந்தாவில் சிறந்த முறையில் முதன் முதலில் தமிழகத்தில் வெளிவந்து உலவிய பெருமை நமது "ஆனந்தபோதினி" மாதச் சஞ்சிகைக்கே உரிமையாகும். இதற்குப் பின்னர் எத்தனையோ பத்திரிகைகள் எல்லா வகையிலும் இதை முன்மாதிரியாகக் கொண்டு எழுந்தன. எனினும் இன்றுகாறும் உறுதியுடன் நின்று நிலவி உழைத்து வருவது இஃது ஒன்றே என்பதை நாம் விரிக்கவேண்டுவதில்லை. நமது "ஆனந்தபோதினி" பாலப் பருவங் கடந்து யௌவன தசையை அடைந்து விட்டது. இனிமேல் இதன் உழைப்பும் பொறுப்பும் பருவத்திற்கேற்ப அதிகமாகும்.

தமிழ்நாடு எல்லாத் துறையிலும் சீழிந்து நிற்கிறது. இதற்கொரு விமோசனம் விரைவில் ஏற்பட்டுத் தீரவேண்டும். "ஆனந்தபோதினி" அதற்குரிய நெறியில் தனது கடமையைச் செலுத்த முனைந்து நிற்கிறது. இது தோன்றியநாள் முதல் மக்களிடையே சிறப்பாகச் சமய அறிவையும் ஒழுக்க அறிவையும் பரப்பி வந்தமை எல்லாரும் நன்கு அறிவர். இன்னும் நமது நாட்டுமக்களின் சமய

உணர்வும் ஒழுக்கமும் பிறர் கைகொட்டி நகைக்கத்தக்க விதமாகவே இருந்து வருகின்றன. நாஸ்திகமும் கூடா ஒழுக்கங்களும் நாட்டில் தலைவிரித்தாடிக் கொண்டிருக்கின்றன. சமயத்தையும் ஒழுக்கத்தையும் காக்கக் கடமைப்பட்ட சமயத் தலைவர்களும் அறிஞர்களும் கண் மூடி மௌனிகளாகி விட்டனர். சமயங்களின் உண்மைக் கருத்துக்கள் பாழ் போய்ச் சத்தற்ற போலிச் சம்பிரதாயங்களே சமயங்களாகக் கருதப்படுகின்றன. உயிராக மதிக்கவேண்டிய ஒழுக்க முறைகள் ஒளியிழந்து ஒடுங்கி வருகின்றன. "ஆனந்தபோதினி" இவற்றின் மறுமலர்ச்சிக்காக இனிமேல் அதிக சிரத்தை காட்டி உழைத்து வரும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

மக்கள் சமூகம் காலத்துக்கேற்ற மாறுதல்களை மேற்கொண்டு வாழ்க்கையைச் செழுமை செய்யவேண்டும். "புதுக்காலை வெட்டாதே பழங்காலைத் தூர்க்காதே" என்ற மனப்பான்மை பரிகசிக்கத் தக்கதாகும். "ஆனந்தபோதினி" சமூகச் சீர்திருத்தத் துறையில் முற்போக்கான வழிகாட்டி வரும் என்பதில் ஐயம் இல்லை. தமிழ் மொழி வளர்ச்சியைப் பற்றிப் பேசாத அறிஞர் இல்லை. இவ் விஷயம் பல்லாண்டுகளாகப் பேசப்பட்டு வருகிறது. எனினும் அதன் வளர்ச்சி குறிப்பிடத்தக்க அளவு நிறைவேறவில்லை. இன்னும் அந்நிய மொழி ஆதிக்கத்தை அணுவளவும் அசைக்க முடியவில்லை. கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும் தமிழ்மொழி முதன்மை பெற வேண்டும். புத்தம் புதிய கலைகள் தமிழ் மொழியிற் பெருகல் வேண்டும். நாட்டு மக்கள் எல்லாருடைய உள்ளங்களிலும் மொழிப்பற்று வளர்ந்தால் ஷை காரியங்கள் எளிதில் கைகூடும். "ஆனந்தபோதினி" அதற்கான வழியில் தனது கடனாற்றிவரும் என்று உறுதி கூறுகின்றோம்.

இக்காலக் கல்வி முறையானது நமது நாட்டுக் கேற்றதாயில்லை. ஆரம்பக் கல்வியிலிருந்து கல்லூரிப் பட்டக்கல்வி வரை அதாவது அடி முதல் நுனிவரை திருத்தி அமைக்க வேண்டியதா யிருக்கிறது. படித்த பட்டதாரிகள் உத்தியோக மோகங் கொண்டவர்களாய் இருக்கின்றனர். அதன் பயனாய் வேலையில்லாத் திண்டாட்டம் கொடுமை செய்து வருகிறது. இக் காலப் பட்டதாரிகள் விவசாயம், கைத் தொழில், வர்த்தகங்களை வெறுப்புக்குரியதாகக் கருதுகின்றனர். இந்த இழிநிலை நாட்டை விட்டு ஒழிந்தாக வேண்டும். "ஆனந்தபோதினி" உண்மைக் கல்வி முறைகளைப் பற்றியும், விவசாயம், கைத் தொழில், வர்த்தகச் சிறப்புகளைப் பற்றியும் நன்முறையில் எடுத்துக் காட்டி வரும்.

நமது நாட்டு இழிநிலைக்கு-பிற போக்குக்கு மூலகாரணம் அரசியல் சுதந்தர மின்மையாகும். அரசியல் விஷயங்களை அறிவுறுத்த பல வேறு வகையான பத்திரிகைகள் இருந்தபோதிலும "ஆனந்தபோ

தினி" அரசியல் தத்துவங்களைப் பற்றியும் முறைகளைப் பற்றியும் அறிவு விருந்தான கட்டுரைகளைத் தாங்கிவரும்.

எனவே தமிழ்நாட்டுச் சகோதரி சகோதரர்கள் இதுகாறும் "ஆனந்தபோதினி"க்கு ஆதரவு நல்கியதைப் போலவே இனிமேலும் ஆதரித்து வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகின்றோம். "ஆனந்தபோதினி"யின் சிறப்பியல்புகள் சந்தாதார்களின் பேராதரவைப் பொறுத்திருக்கின்றன. இதைத் தவிர எங்களுக்கு வேறு எத்தகைய உதவியும் கிடையாது. ஆகையால் புத்தாண்டின் ஞாபகார்த்தமாக ஒவ்வொரு சந்தா நேயரும் குறைந்த பக்ஷம் இரண்டு சந்தாதாரரையேனும் சேர்த்துக் கொடுத்தால் பேருபகாரமாயிருக்கும் என்று அறிவித்துக் கொள்ளுகின்றோம். "போதினி"க்குச் செய்யும் உதவி தமிழக மேன்மைக்குச் செய்யும் உதவியாகும் என்பதை நாம் விரிக்கவும் வேண்டுமோ?

இதுகாறும் "ஆனந்த போதினி"யைத் தங்கள் அரிய கட்டுரைகளால் அலங்கரித்து வந்த அறிஞர்கட்கும், சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பியும், வி. பி. யில் பெற்றும், ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்தும் "போதினி"யை ஆதரித்து வரும் அன்பர்கட்கும், புதிய சந்தா நேயர்கட்கும் எமது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். மேற்கண்ட அன்பர்கள் எல்லாரும் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் பெற்றுப் பல்லாண்டு வாழுமாறு திருவருளைச் சிந்தித்து வந்திருக்கின்றோம். சுபம்!

## பிரஜா உரிமைச் சங்கம்



நமது மக்களின் ஜீவாதார, உரிமைகள் கேள்வி முறையின்றிப் பறிமுதல் ஆகிக் கொண்டிருக்கின்றன. காந்தியடிகள் தொடங்கிய சட்டமறுப்பு இயக்கம், ஷை உரிமைகள் பறிமுதல் ஆவதற்கு மேன் மேலும் ஆக்கம் அளித்தது என்று கூறலாம். ஜனநாயக தருமமுறைப்படி ஆட்சி செலுத்தப்படும் எந்த நாட்டிலும் இல்லாத அதிக்கிரமங்கள் இங்கே சகஜமாக நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. நமது நாட்டில் வாக்குச் சுதந்தரம் இல்லை. பத்திரிகைச் சுதந்தரம் இல்லை. எழுத்துச் சுதந்தரம் இல்லை. சட்டசபைகளுக்குச் சரியான சுதந்தரம் இல்லை. விசாரணையின்றிக் கைதிகளைச் சிறைகளில் அடைத்து வைத்தல், சிலரைப் பாதுகாப்புக் கைதிகளாக்குதல், அவசரச் சட்டங்களால் மக்களின் சாமானிய உரிமைகளையும் தடை செய்தல் போன்ற காரியங்கள் நமது நாட்டில் சர்வ சாதாரணமாகி விட்டன. இங்ஙனம் நாட்டு மக்களின் பிரஜா உரிமைகள்

ஒடுக்கப்பட்டு வருவதைத் தடை செய்யாவிட்டால் பிறகு நமது நிலைமை மிருகங்களைவிடக் கேவலமாகி விடும் என்பதில் அணுவளவும் ஐயம் இல்லை. இவ் வுண்மையை அநுபவத்தில் கண்டறிந்த காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் இந்தியாவில் பிரஜா உரிமைச் சங்கத்தை ஏற்படுத்தத் தீவிரமாக முயன்று வருவதை நேயர்கள் கவனித்திருக்கலாம். பொதுஜனங்கள் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களைப் பற்றியும் தங்கு தடையின்றி விவாதிக்க ஜனங்களுக்கு உரிமை இருக்குமாறு உழைப்பது ஷை பிரஜா உரிமைச் சங்கத்தின் முக்கிய நோக்கம். லக்ஷ்மணபுரி காங்கிரஸ் இந்தச் சங்கத்தின் அவசியம் உணர்ந்து தீர்மானம் செய்தது. சுமார் இரண்டு மாதங்கட்கு முன் பண்டித ஜவஹர்லால் நேரு பம்பாய்க்கு வந்து ஷை சங்கத்தை ஸ்தாபிக்க ஏற்பாடு செய்தார். இதைப்பற்றி ஆராய்ந்து வேண்டுவன செய்ய ஒரு நிபுணர் கமிட்டியும் அப்பொழுது நியமிக்கப்பட்டது. பிறகு சமீபத்தில் வார்தாவில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் காரியங் கமிட்டியும் இதை விவாதித்து முடிவு செய்தது. இப்பொழுது பிரஜா உரிமைச் சங்க ஏற்பாடு முற்றுப் பெற்றிருப்பதை அறிந்து மகிழ்ச்சிப் பெருக்கடைகின்றோம். மக்களின் உரிமைகள் எங்ஙனம் ஒடுக்கப்படுகின்றன—உரிமைகளை இழந்தோரின் தொகை—மற்ற விவரங்கள் ஆகிய எல்லா அம்சங்களையும் பிரஜா உரிமைச் சங்கத்தார் விசாரித்துக் கணக்கெடுப்பார்கள். பிறகு சட்ட நிபுணர்களின் ஆலோசனையின் மீது தக்க நடவடிக்கைகளை எடுக்க முயற்சிப்பார்கள்.

இந்தச் சங்கத்திற்கு "நேஷனல் கவுன்சில்" ஒன்றும், கிளை ஸ்தாபனங்களாகப் பல ஸ்தலக் கமிட்டிகளும் ஏற்படுத்தப்படும். இச் சங்கத்திற்குச் சாதி சமய கக்ஷி வேற்றுமைகள் இல்லை. எல்லாருக்கும் பொதுவாகவே இருக்கும். சங்கத்தில் நேர்முக அங்கத்தினராகவோ அல்லது நேஷனல் கவுன்சில் அங்கத்தினராகவோ அல்லது ஸ்தலக் கமிட்டி அங்கத்தினராகவோ இருக்க விரும்புவோர் பிரஜா உரிமைச் சங்கத்தின் எல்லா நோக்கங்களையும் ஆதரிக்கவேண்டும். பிரஜா உரிமைச் சங்கத்தின் ஸ்தலக் கமிட்டிகளை எங்கே வேண்டுமானாலும் ஏற்படுத்தலாம். பிரஜா உரிமை ஒடுக்கப்படுவது பற்றிய தகவல்களையெல்லாம் ஸ்தலக் கமிட்டி அங்கத்தினர்கள் சேகரிக்க வேண்டும். ஷை தகவல்களைப் பொது மக்கள் அறியுமாறு வெளியிட வேண்டும். தவிர உஷார் கோஷ்டிகளையும் ஏற்படுத்தலாம். இந்தக் கோஷ்டியார் பிரஜா உரிமை ஒடுக்கப்படும் இடங்களைக் கவனித்திருந்து தகவல் கொடுக்க வேண்டும்.

தமிழ் மக்கள் பிரஜா உரிமைச் சங்கத்திற்குப் போதாதவு நல்குவார்கள் என்றே நாம் எதிர்பார்க்கின்றோம். இந்தியாவின் ஒவ்வொரு மூலை முடக்கிலும் ஷை சங்கம் செல்வாக்குடன் வேலை செய்ய

வேண்டும் என்பது எமது வேட்கை. ஏன்? நமது நாட்டு மக்களில் பெரும்பான்மையோர் ஒன்றுமறியாத மூடப்பூச்சிகள். மக்கள் உரிமைகள் எவை? அரசாங்கக் கடமைகள் எவை? என்பனபோன்ற உண்மைகளை நம் நாட்டு மக்கள் அறியார். ஊர்ச் சேவகனைக் கண்டு ஓடி ஒளியும் பேதைமையே இந்தியாவெங்கும் நிறைந்திருக்கிறது. நல்ல வேளையாகக் காந்தியடிகள் காங்கிரஸில் காலடிவைத்த பிறகு நாட்டு மக்களிடையே ஒரு அரசியல் விழிப்பு ஏற்பட்டது. இனி, பிரஜா உரிமைச் சங்கம் இத் துறையில் சிறந்த தொண்டாற்றும் என்றே நம்புகின்றோம். "தன்னைத்தான் உணர வேண்டும்" என்பது வேதாந்தவாக்கு. அரசியலிலும் ஒவ்வொரு பிரஜையும் தன்னைத்தான் உணர்ந்தாலன்றி விமோசனம் முயற் கொம்பாகி விடும். அதற்குப் பிரஜா உரிமைச் சங்கம் பெருந் துணை செய்யும். எனவே தமிழகத்தில் ஒவ்வொரு பெரிய நகரிலும், சிறிய நகரிலும், கிராமத்திலும் பிரஜா உரிமைச் சங்கம் உயிருடன் தொண்டாற்றிக் கொண்டிருக்கவேண்டும். ஆங்காங்குள்ள பொது நலத் தலைவர்களும், தொண்டர்களும், மற்றப் பிரமுகர்களும் கருத்து வேற்றுமைகளை யெல்லாம் தூரத்தில் ஒதுக்கி வைத்துவிட்டு மக்கள் வாழ்க்கையின் உயிர்நாடிபோன்ற பிரஜா உரிமைச் சங்க முன்னேற்றத்திற்குச் சேர்ந்து உழைக்கவேண்டும் என்று ஆசைப்படுகின்றோம்.

ஓம் தத் ஸத்.

## நன்கொடை வரவு

கடல் கடந்து பிறநாட்டில் குடியேறி வாழ்ந்தும் தங்கள் தாய் நாட்டையும் தாய் மொழியையும் அன்புடன் போற்றும் அறிஞர் அநேகர் இருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். தென்னுப்பிரிக்காவைச் சேர்ந்த டர்பனிலுள்ள உயர் திரு. இரா—அரசுப்பிள்ளை அவர்கள் நமது "ஆனந்தபோதினி"யை அன்புடன் ஆதரித்து வருவதோடு அடிக்கடி நன்கொடையும் அனுப்பி வருகிறார்கள். இவர்கள் மூன்று முறையாக அனுப்பிய ரூபாய் பதினெட்டையையும் நன்றியறிதலுடன் ஏற்றுக்கொண்டோம். உயர் திரு இரா. அரசுப்பிள்ளை அவர்கள் எல்லா நலமும் இனிது எய்திப் பல்லாண்டு வாழுமாறு ஆண்டவனை வேண்டுகின்றோம்.

பத்திராதிபர்.

# "ஆனந்தபோதினி"யின் 22-ம் ஆண்டு
# வாழ்த்துப் பாக்கள்

(கா. சின்னப்பா, தெல்லிப்பழை.)

விருத்தம்.

இருபானே டோராண்டிங் கெழில்மிக் குற்றே
இசைபரப்பி யானந்தன் புரிந்த சேவை
பெருமைதனை முனிசாமி பிள்ளைக் கென்றும்
பெட்புடனிங் களிக்குமெனப் பெரியோர் செப்பும்
ஒருமொழியை யுள்ளவா றுணர்வோ ரெல்லாம்
ஒப்பருமிப் பத்திரிகை தன்னைப் பெற்றே
அருங்கலைவல் லறிஞா லெழுதும் போதம்
அத்தனையும் வாசித்திங் கறிதல் நன்றே. 1.

ஆனந்த போதினியை யார்வத் தோடிங்
கறிவொழுக்கம் நிறைந்தநல் லன்ப ரெல்லாம்
ஏனிந்த இருபத்தோ ராண்டும் பெற்றே
இன்பமுடன் வாசித்தா ரென்றிங் கோர்வோர்
கானிந்தப் பாக்களிலே நயந்து செப்பும்
நன்றிசெறி யுண்மைதனை நன்றாய்த் தேர்வர்
ஆனந்த மெமக்கென்று மளிக்கும் பத்ரம்
அனவரதம் நிலைக்கவென வாழ்த்து வோமே. 2.

முனிசாமி முதலியா ரிந் நாட்டு மக்கள்
முதன்மைபெறப் பத்திரிகை யொன்றை நாட்டித்
தனிச்சேவை தான்புரிதல் தக்க தென்று
தன்மனதி லுன்னியதாற் றகைமை சான்ற
இனிமைபல மனதிற்கிங் கென்றுஞ் சேர்க்கும்
எத்தனையோ வியாசங்க ளிலங்குகின்ற
கனிசிறந்த போதினியை நமக்கிங் கீந்த
நன்றிக்கா யவரினைநாம் துதித்தல் நன்றே. 3.

எத்தனையோ மானிடருக் கின்பம் நல்கி
எல்லையிலாத் துறைகளிலே யிருளை நீக்கிச்

சித்தத்தைச் சிறக்கிடவே செய்யு மாற்றால்
சீருடனே யானந்தன் சேருந் தேசம்
எத்தனையென் றெடுத்துரைத்த வியலா தேனும்
எத்திறத்தார் தமக்குமிங் கேற்ற தாகப்
பத்திநிறை பாக்களுடன் வியாச மெல்லாம்
பண்புடனே பொலிவதனைப் பகரு வோமே. 4.

அன்புடனே யானந்தன் றன்னையிங்கே
ஆதரிப்போர் பத்திரா சிரிய ரோடிங்
கின்பமுட னியன்றவரை விஷய தானம்
ஈந்திடுவோ ரெல்லாரு மென்று மோங்கி
மன்பதைகள் வாழ்த்திடவே மாண்பிங் கெய்த
மாபரனின் பாதார விந்தந் தன்னை
அன்பரெலாம் வழுத்திடுத லறனென் றெண்ணி
யாமிந்தப் பாவதனை யறைகு வோமே. 5.

இப்பாரி லிருபானே டிரண்டா மாண்டும்
எழில்பெற்றிங் கானந்த னெப்பா லார்க்கும்
தப்பாது நன்மைபல சாரச் செய்தே
சந்ததமு மோங்கிடவே யீசன் றன்னை
எப்போது மன்புடனே யேத்தி யின்போ
டிதுகாறும் புரிந்தபல நன்மைக் காக
முப்போதும் முனிசாமி முதலியாரை
முழுமனதோ டர்ச்சித்தல் முறைதா னன்றே. 6.

பின்னருநற் கீர்த்திதனைப் பாங்கோ டிங்கு
பாரினிலே யெய்தியதாற் பல்லோர் வாழ்த்த
நன்னயமாய்த் தமிழ் பேசும் நாட்டோர்க் கெல்லாம்
நற்பொருட்கள் பொதிந்தபல போதந் தன்னைச்
சொன்னநன் முறையினாலே தொடர்பாய் மாதந்
தோறுமற்ப சந்தாவாம் தொகை தனக்கு
மன்னவனும் முனிசாமி மகிபன் தானும்
மகிழ்ந்துதவு பெற்றி தன்னைப் போற்று வோமே. 7.

---




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(தொகுதி 21, பகுதி 12. 946-ம் பக்கத் தொடர்ச்சி.)

## இரண்டாவது அத்தியாயம்—முதல் பாதம்

குறிப்பு:—உபாதான காரணம் என்பது முதற்காரணம். குடத்திற்கு மண் உபாதான காரணம்.

காரணம் காரியமாவது நான்கு வகைப்படும். அவையாவன:—

1. விருத்தி, 2. பரிணமம், 3. ஆரம்பம், 4. விவர்த்தம். என்பனவாம். இவற்றுள்,

1. விருத்தி:—ஆடை வீடுருவமாதல்; மண் கடமாவதும் இதுவே, (விருத்தியாவது உபாதான (முதற்) காரணத்தினின்றும் காரியம் சூக்குமத் திரிபாய் உண்டாவது. உதாரணம்:—ஆடை வீடுருவமாக அமைதல் போல்வது. வீடு (டேரா) மறுபடியும் தன் உபாதான காரணமான ஆடையின் வடிவமாவதாம். விருத்தி என்பது இங்குச் சூட்சும பரிணமம்.

2. பரிணமம்:—ஒரு பொருள் தன் வடிவத்தை விட்டு வேறு வடிவத்தை யடைவது. உதாரணம்;—பால் தயிராதல், (தயிர் மறுபடியும் தன் உபாதான காரணமான பாலின் வடிவமாகாது. இது ஸ்தூல பரிணமம். பரிணமம்=திரிவு.

3. ஆரம்பம்:—பல அவயவங்களோடு கூடிய பல காரணங்களினின்றும் பல அவயவங்களோடு கூடிய ஒரு காரிய முண்டாவது. உதாரணம்:—பல அவயவங்களோடு கூடிய பல நூல்களினின்றும் பல அவயவங்களோடு கூடிய ஓர் ஆடை உண்டாதல் போல்வது.

4. விவர்த்தம்:—ஒரு பொருள் தன் வடிவத்தை விடாமல் வேறு வடிவத்தைத் தன்னிடத்தில் காட்டுதல், உதாரணம்:—கயிற்றில் பாம்பு தோன்றுதல்.

(கயிறு தன் வடிவத்தை விடாமல் வேறு வடிவமாகிய சர்ப்பத்தைத் தன்னிடத்திற் காட்டுதல் காண்க.)

பிரம்மத்திற்கும் உலகிற்கு முள்ள சம்பந்தம் கயிற்றிற்கும் சர்ப்பத்திற்கும் உள்ள சம்பந்தம் போல்வதாம் என்று முன்னர்க் கூறப்பட்டது. எனவே, பிரம்மம் உலகிற்கு விவர்த்த உபாதான காரணமா யிருப்பதாம். பிரம்மம்

நிர்வயவ மென்றும் சுருதி சொல்லுதலின், விகாரத்தாலுண்டாவதாகிய பரிணாமவாதமாவது அவயவங்களை வேண்டுவதாகிய ஆரம்ப வாதமாவது பொருந்தா தென்றறிக.

மேற் கண்ட விஷயங்கள் பின் வரும் விஷயங்களை யறிதற்கு அத்தியாவசியமாகலின் இவற்றை மறவாமல் மனத்தில் வைத்தல் வேண்டுவது அத்தியாவசியமாம்.)

கீழ்வருவது பூர்வபக்ஷ சூத்திரம்.

8-வது சூத்திரம், அவதாரிகை:—(சத்காரியவாதம்—காரியம் சத்தியம் என்று வாதித்தல். அத்வைதம் சத்காரியவாதமல்ல வாயினும் காரண காரியங்கள் அபின்ன மென்றும் காரியத்தன்மை காரணத்திலுள்ள தென்றும் கூறுதலால் அது சத்காரியவாதம் என்று கொண்டு பூர்வபக்ஷிகள் வாதிக்கின்றனர் என்றறிக) சத்காரியவாதம் சித்திப்பதற்காக காரண காரியங்களுக்கு அநந்யத்தன்மை (வேறாகாத்தன்மை) அங்கீகரித்தால், தண்ணீரில் ஒடுங்கிய உப்பானது அந்தத் தண்ணீரைக் கெடுப்பது போல, காரணத்திற்கும் காரியத்தைப் போலவே அசுத்த முதலாகியவைகளைச் சொல்ல வேண்டிவரும் என்று நிரூபிப்பதற்காக,

சூ. 8. "அபீதௌ தத்வத்ப்ரஸங்காத ஸமஞ்ஜஸம்"

பதவுரை:—அபீதௌ=பிரளயத்தில், தத்வத்ப்ரஸங்காத்=விகாராதி தோஷப் பிரசங்கம் பிரம்மத்திற் குண்டாவதால், அஸமஞ்ஜஸம்=வேதாந்த மதம் அயுக்தமாம்.

கருத்து:—காரியமானது காரணத்தில் ஒடுங்கி (லயித்து) ஏகரூபமாவதே பிரளய மெனப்படும். அவ்வாறு ஒடுங்கின காலத்தில் காரியத்தினிடத்திலுள்ள ஸ்தூலத்தன்மை, அவயவத்தன்மை, அசேதனத்தன்மை, பரிச்சின்னத்தன்மை, அசுத்தத்தன்மை முதலிய தருமங்கள் (தன்மைகள்) பிரமத்திற்கு உண்டாகும். இது முதலாவது தோஷம். மேலும்,

எல்லா விபாக பதார்த்தங்களும் (வெவ்வேறாகப் பிரிபட்டுள்ள பதார்த்தங்களும்) பிரளயத்தில் அவிபாகத் (வேற்றுமையற்ற) தன்மையைப் பொருந்தியிருத்தலாலும், புனருற்பத்திக்கு (மீண்டும் தோன்றுதற்கு) நியமமான காரண மில்லாமலிருத்தலாலும் (ஒடுங்கின முறையே வேற்றுமைப்பட்டனவாய்த் தோன்ற முடியாமையாலும்,) போக்த்ரு (போகத்தை யனுபவிப்பவன்) போக்ய (போகப் பொருள்கள்) வேறு பாட்டுடன் அத்தகைய (ஒடுங்குதற்கு முன்னம் இருந்தது போன்ற) உற்பத்தியாவதற்கு இயலாமற் போகின்றது. இஃது இரண்டாவது தோஷம். மேலும்,

ஜீவர்கள் பிரம்மத்தோடு வேறு படாத்தன்மையோடு கூடிய நிலையை யடைந்திருத்தலால் முக்தர்களும் மீண்டும் மற்றவர்களோடு நிஷ்காரணமாகப் பிறக்க வேண்டிவரும். இது மூன்றாவது தோஷம். தவிர,

அப்படிக்கின்றி, எல்லாப் பதார்த்தங்களும் பிரம்மத்தினிடத்து வேறுபட்ட தன்மையோடு சேர்ந்திருக்கின்றன என்று கூறின் பிரளயமே இல்லை என்று சொல்ல நேரும். இது நான்காவது தோஷம். ஆகலின், பிரம்ம காரணவாதம் அயுக்தமாம்.

9-வது சூத்திரம்:—அவதாரிகை:—அழிவுபட்ட குடமானது தனக்குக் காரணமான மண்ணில் ஒடுங்கினபோது அந்த மண்ணை எப்படிக் கெடுப்பதில்லையோ அப்படியே பிரளயத்தில் ஜகத்தானது தன் காரணத்தில் ஒடுங்கும் போது அதனைக் கெடுப்பதில்லை என்று சித்தாந்தப் படுத்தப்படுகிறது.

சூ. 9. "நதுத்ருஷ்டாந்த பாவாத்."

பதவுரை:—நது=பூர்வபக்ஷிகள் சொன்ன தோஷம் சரியன்று, த்ருஷ்டாந்த பாவாத்=காரியத்தின் குணங்கள் காரணத்தைக் கெடுப்பதில்லை என்பதற்கு திருஷ்டாந்தம் இருத்தலால்.

கருத்து:—காரியத்தின் குணங்கள் காரியத்தைக் கெடுப்பதில்லை என்பதற்கு அனுபவ பூர்வமான திருஷ்டாந்தங்கள் இருக்கின்றன. காரியத்திற்கு அக்காரியத் தன்மையைக் குறிக்கும் ஏதுக்களான பரிமாணம் (அளவு) முதலிய விகாரங் (வேறுபாடு) களைத் தரித்து காரணத்தில் அது (காரியம்) ஒடுங்குவதல்லவா அதற்குப் பிரளயமாகும்? மனித வடிவாகச் செய்யப்பட்ட மண்ணானது அந்த மனித வடிவம் அழிந்தவுடனே மீண்டும் மண்ணேயாகின்றது. அப்பொழுதே அது மறுபடியும் காரண பாவத்தை அடைந்ததாகிறது. அவ்வாறு அடைந்தபோது முன்னேயிருந்த மனித வடிவத்தின் அவயவங்களையும் அந்த மண்ணைப் பாதிப்பதில்லை. அப்படியே, பிரபஞ்சத்திற்குக் காரணமான பிரம்மத்தில் அது (பிரபஞ்சம்) ஒடுங்கும்போது அதன் (பிரபஞ்சத்தின்) விகாரங்களைக்கொண்டு பிரம்மத்தைப் பாதிப்பதில்லை. காரிய காரணங்கள் அன்னிய மானவையாயினும், காரியத்திற்குக் காரணாத்மத் தன்மை காரணத்தை விட்டிராத தன்மை) உண்டேயன்றி, காரணத்திற்கு காரியாத்மத் தன்மை (காரியத்தை விட்டிராத் தன்மை) இல்லை. (காரணத்தை விட்டுக் காரியமிராது; காரியத்தை விட்டுக் காரணம் இருக்கும் என்பது கருத்தாம்.) (இந்த விஷயம் மேல்வரும் 14-ம் சூத்திரத்தினுரையில் விளக்கப்படும். ஆண்டுக் காண்க).

காரிய காரணங்கள் மூக்காலத்தும் அநந்யம் என்று சுருதிகள் கூறுகின்றன. தவிர, வேதாந்த மதத்தில் காரியமான ஜகத்தும் அதன் தர்மங்களும் சத்திய மன்றெனவும், அவித்தியாரோபிதமானவை (அஞ்ஞான கற்பிதங்கள்) எனவும் சொல்லப்படுதலால், அவை (ஜகத்தும் அதன் தர்மங்களும்) காரணமாகிய பிரம்மத்தைப் பாதிக்கும் என்னும் தோஷம் எக்காலத்தும் உண்டாகாது. இந்த விஷயத்தில் மற்றொரு திருஷ்டாந்த முண்டு. அதாவது:—பலவித மாயகாரியங்களைச் செய்யும் இந்திரஜால வித்தைக்காரன் தன்னிடத்திலுள்ள அந்த மாயையால் தாக்கப்படுவதில்லை. அதுபோல அவஸ்துவாகிய சம்சார மாயையால் பரமாத்மாவும் தாக்கப்படுவதில்லை. மேலும்,

சொப்பனங் காண்பவன் அந்தச் சொப்பனத்திற்காணும் பொருள்களால் விழிப்புக் காலத்திலும் சொப்பன காலத்திலும்கூட எப்படி பாதிக்கப்படுவதில்லையோ, அப்படியே அவஸ்தாத்திரய (சாக்கிரம், சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்று அவஸ்தைகளுக்கும்) சாட்சியாகிய பரமாத்மாவும் ஜன்ம ஸ்திதிலயங்களாகிய மூன்றினும் அவற்றின் தோஷங்களால் பாதிக்கப்படான். தவிர, சயிற்றி னிடத்துண்டாகும் பாம்பின் தோற்றமானது மூக்காலத்தும் அசத்தியமாக விருத்தல் போலவே, பரமாத்மாவினிடத்து உண்டாகும்

ஜன்ம ஸ்திதி லயத் தன்மைகளின் தோற்றமும் மாயா மாத்திரமாகவே யிருக்கின்றது. "மாயா மாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்ததః" என்று கூறும் சுருதியையும் காண்க. ஆகலின், காரியத்தின் தோஷங்கள் காரணத்தைக் கெடுக்கும் என்னும் முதல் ஆக்ஷேபம் சரியானதன்று.

சுஷுப்தி சமாதி முதலிய காலங்களில் ஜீவன் ஆத்மாவோடு அவிபாக நிலையை யடைந்தும், மித்தியாஞானம் நாசமாகாமையின், விழிப்புக் காலத்தில் மீண்டும் விபாக நிலையையே அடைகின்றான். அப்படியே பிரளயத்தும் எல்லா ஜீவர்களும் ஈசுவரனோடு அவிபாக நிலையை யெய்தியும், அவர்களுக்கு அவித்தை (அஞ்ஞானம்) நாசமாகாமையின் பிரளயாந்தத்தில் மீண்டும் விபாகத்தையே அடைகின்றனர். சுருதியானது, "நாள்தோறும் ஜீவர்கள் பரமாத்மாவை யடைகின்றார்கள்; ஆனால், அந்த விஷயத்தைத் தெரிந்துகொள்ள முடியாமலிருக்கின்றார்கள்" என்று கூறுவதையும் காண்க. ஆகையால், பூர்வபக்ஷிகளின் இரண்டாவது ஆக்ஷேபமும் யுக்தமான தன்று.

முக்தர்களுக்கு அவித்தை நாசமாய் விடுதலால் மீண்டும் உற்பத்தியாவார்கள் என்னும் தோஷம் சம்பவியாது. ஆதலின் மூன்றாவது ஆக்ஷேபமும் பொருந்ாது.

பிரளயத்திவ் ஜகத்தானது பிரம்மத்தினும் வேறாக இருக்கும் என்று வேதாந்திகள் எங்கும் கூறி யிருக்கவில்லை. ஆகையால் நான்காவது ஆக்ஷேபமும் சரியன்று.

10 வது சூத்திரம். அவதாரிகை:—பூர்வபக்ஷிகளாகிய தார்க்கிகர்களால் செய்யப்பட்ட மேற்கண்ட ஆக்ஷேபங்கள், பூர்வபக்ஷிகளில் ஒரு சாராராகிய சாங்கியர்களுக்குப் பொருந்துமேயன்றி, காரியமித்தியாத்துவ (காரியம் மித்தை என்னும்) வாதிகளாகிய வேதாந்திகளுக்குப் பொருந்தா என்று கூறப்படுகிறது.

சூ. 10. "ஸ்வபக்ஷ தோஷாச்ச."

பதவுரை:—ஸ்வ பக்ஷதோஷாத்—ச=பிரதிவாதிகளாகிய சாங்கியர்களின் பக்ஷத்தில் தோஷ மிருத்தலாலும் (உபநிடதங்களை யாதாரமாகக் கொண்டுள்ள வேதாந்தமதம் யுக்தமானதே.)

கருத்து:—அத்வைதிகள் காரியமித்யாத்வ வாதிகள் (காரியம் மித்தை என்று கூறுவோர்) துவைதிகள் காரியம் சத்தியம் என்று கூறுவோர். நையாயிக, வைசேடிக, சாங்கிய, யோக, மீமாம்சகர்க ளனைவரும் துவைதிகளே. மேலே பூர்வபக்ஷிகளால் சொல்லப்பட்ட அவிலக்ஷணத்வாதி தோஷங்கள் முக்கியமாகச் சாங்கியர்களுக்கே பொருந்தும், எப்படி யெனில்:—அதிக சூட்சுமமானதும், விகாரமற்றதும், அவயவமற்றதுமாகிய பிரதானத்தி (பிரகிருதியி)லிருந்து அதில் வேறான தருமங்களையுடைய ஜகத்து உற்பத்தியாயிற்றென்று அவர்கள்தான் கூறுகின்றார்கள். ஆதலால், அவர்களே காரணத்தினும் வேறான லக்ஷணத்தையுடைய காரியத்தி னுற்பத்தியை அங்கீகரித்தவர்களாகின்றார்கள். ஆகையால், ஜகத்தி னுற்பத்தியில் அசத்காரியவாதம் சொல்லவேண்டி நேரும்.

பிரளயத்திலும் முன் 8-ம் சூத்திரத்திற் காட்டப்பட்ட நான்கு தோஷங்களும் உண்டாகும். எவ்வாறெனில்:—

(1) பிரளயத்தில் காரியத்திற்குக் காரணத்தோடு அவிபாகம் அங்கீகரிக்கப்படுதலால், பிரபஞ்சத்திற்குள்ள ஸ்தூலத் தன்மை முதலிய தோஷங்கள் பிரதானத்தை (காரணத்தை)ப் பாதிக்கும் (காரியம் சத்தியமாக இருத்தலால்.)

(2) பிரளயத்தில் ஜீவர்கள் பிரதானத்தோடு ஐக்கிய மடைந்தால் மறுபடியும் அவைகள் நியமகாரண மில்லாமற் போதலால் போக்த்ருபோக்கிய விபாகத்தோடு தோன்ற மாட்டா.

(3) காரணம் இல்லாவிடினும் போக்த்ரு போக்கிய விபாகத்தோடு தோன்றும் என்று கூறும் பக்ஷத்தில் காரணாபாவ ஒற்றுமையால் முக்தர்களுக்கும் மீண்டும் பந்தம் (பிறப்பு) உண்டாகும் என்று சொல்லவேண்டி யிருக்கும்.

(4) பிரளயத்தில் பத்த ஜீவர்களின் பிறவிக்கேதுவான காரண சரீரங்கள் வெவ்வேறாக வேறு பட்டிருக்கும் என்றும், முக்தர்களின் காரண சரீரங்கள் பிரதானத்தில் ஒடுங்கும் என்றும் கூறும் பக்ஷத்தில், பெத்தர்களின் காரணசரீரங்கள் பிரதானத்தின் காரியங்களல்ல என்று சொன்னதாகும். இது அவர்களின் கொள்கைக்கே விரோதமானது.

இவ்வாறு இந்தத் தோஷங்கள் பூர்வபக்ஷிகளுக்கே பொருந்துகின்றனவன்றி, காரியம் மித்தை என்று கூறும வேதாந்திகளுக்குப் பொருந்துவனவல்ல என்றறிக.

11-வது சூத்திரம். அவதாரிகை:—தர்க்கத்தினால் சுபக்ஷ தோஷங்களைப் பரிகரிக்கின்றோம் என்று பிரதிபக்ஷிகள் கூறுதலால், வேதபாகியங்களும் மனிதரின் ஊகை மாத்திரத்தா லுண்டானதுமான தர்க்கங்கள் இந்திரியங்களுக் கெட்டாத பிரம்மத்தை நிரூபணஞ் செய்வதற்குச் சக்தி யுடையவையாகா என்று கூறப்படுகின்றது.

சூ. 11. தர்க்காப்ரதிஷ்டாநாதப்யந்யதாநுமேயமிதிசேதேவமப்ய விமோக்ஷ ப்ரஸங்கஃ

பதவுரை:—தர்க்கா ப்ரதிஷ்டாநாதபி=தருக்கத்தின் அஸ்திரத்தன்மையாலும், (சுபக்ஷதோஷம் பரிகரிக்கக் கூடாமல் வேதாந்தமதம் யுக்தமுடையதா யிருக்கின்றது); அந்யதா=அந்த அஸ்திரத்தன்மை உண்டாகாம விருப்பதற்காக, அநுமேயம்=சாங்கிய தர்க்கஸ்வரூபம் யோசிக்கத்தகுந்தது, இதி சேத்=இவ்வாறு கூறுவாயானால், எவமபி=இவ்வாறு யோசித்தாலும், அவிமோக்ஷப்ரஸங்கஃ=மோக்ஷராகித்ய தோஷம் சம்பவிக்கும்.

கருத்து:—தர்க்கமானது ஸ்திரமற்றிருப்பதனாலும் சுபக்ஷ (பூர்வ பக்ஷிகளின்) தோஷம் நிவர்த்திக்கக் கூடாததாகிறதினால் வேதாந்தமதம் யுக்தமுடையதாகின்றது. எவ்வாறெனின்: கபிலன் சர்வஞ்ஞன் (பேரறிவுள்ளவன்) ஆகலின் அவனால் உண்டாக்கப்பட்ட தர்க்கம் (தார்க்கிக மதம்) குற்றமில்லாதது என்று அநுமானிக்கத் தக்கதாயிருக்கின்றது என்று பிரதிபக்ஷிகள் ஒரு கால் உரைக்கலாம். ஆனால் அப்படியே கௌதமரும் (இவர் நையாயிக மத கர்த்தா), கணாதரும் (இவர் வைசேடிகமத கர்த்தா), பதஞ்சலியும் (இவர் யோகமத கர்த்தா), ஜைமினியும் (இவர் மீமாம்சையின் கர்த்தா), முதலியவர்களும் கூட சர்வஞ்ஞர்களே என்று சொல்லப்படுகிறார்க ளாகலின், சாங்கிய

மதத்திற்கு விரோதமாகப் போதிக்கும் இவர்களின் மதங்களும் ஸ்தாபிக்கப் படத்தக்கவையாகின்றன. ஒன்றற்கொன்று விரோதமாக வுள்ளவைகளாகிய இந்தத் தர்க்கங்களெல்லாம் ஸ்தாபிக்கப்படத்தக்கவையே என்று கூறுதல் அசம்பாவிதமல்லவா?

இப்படி எல்லாத் தர்க்கங்களுக்கும்போல சாங்கிய தர்க்கத்திற்கும் ஸ்தா பிக்கப்படத்தகாதது என்னும் தன்மையே விளங்குகின்றது. ஆதலினால், அத னால் என்றைக்கும் மோக்ஷப்பிராப்தி யுண்டாகாது. சுருதியின் அனுக்கிரகத் தோடு கூடிய தர்க்கமே உபாதேயம் (கிரகிக்கத்தக்கது) என்று ஸ்மிருதிகளும் கூறுகின்றன. உலக விவகாரத்தில் சில விஷயங்களுக்குத் தருக்கம் உதவி செய்வதாக விருப்பினும் ஜெகத்காரண வஸ்துவை நிர்த்தாரணம் செய்யும் விஷயத்தில் அது பிரயோஜன முடையதாதலில்லை. ஏனெனில், அந்த ஜகத் காரண வஸ்துவானது அத்விதீயமாயும், சச்சிதானந்தமாயும், வேதைக வேத்ய மாயும் இருப்பது. அது உருவம் முதலியவை அற்றதாகலின் இந்திரியங்க ளால் அறியப்படாதது. லிங்கம் (குறி) முதலியவை யில்லாததா யிருத்தலின் அனுமானம் முதலிய பிரமாணங்களால் அறியப்படத் தகுந்ததாகாது.

## 4–வது சிஷ்டா பரிக்ரஹாதி கரணம்.

12–வது சூத்திரம். அவதாரிகை:—பிரதான காரண வாதத்தை (பிர தானமே ஜெகத்காரண மென்று கூறும் சாங்கியர்களின் வார்த்தை) நிராகரித் ததனால் கணாதர் முதலியவர்களின் வாதங்களும் நிராகரிக்கப் பட்டனவாகும் என்று கூறப்படுகின்றது.

### சூ. 12. "ஏதேநசிஷ்டா பரிக்ரஹா அபிவ்யாக்யாதாః"

பதவுரை:— ஏதேந=பிரதான காரணவாத நிராகரணத்தினால் சிஷ்டா பரிக்ரஹா அபி=எந்த அமிசத்திலும் சிஷ்டர்களால் ஏற்றுக் கொள்ளப்படாத அணுவாதி காரணவாதங்களும், வ்யாக்யாதாః=நிராகரிக்கப்படும்.

கருத்து:—பிரதானம் காரணம் என்னும் மதம் (சாங்கிய மதம்) சில அமி சங்களிலாவது வேதானுசாரமாய், மிக்க தர்க்கவாத பலமுடையதாய், பெரி யோர்களால் அங்கீகரிக்கப் படத்தக்கதா யிருக்கின்றது. அத்தகைய சாங்கிய மதத்தை நிராகரித்ததனாலேயே, எந்த அமிசத்திலும் வேதானுசாரியாகாத தும் சிஷ்டர்களால் அங்கீகரிக்கப் பட்டதுமாகிய பரமாணு முதலியவற்றை ஜகத்காரண மென்று வாதிக்கும் மதங்களும் நிராகரிக்கப் பட்டனவாகும்.

சாங்கியர்கள் சத்காரியவாதிகளாகலின் அவர்கள்மதம் சில வகைகளிலா வது அங்கீகரிக்கத்தக்கதாகும். அணுவாதிவாதிகள் அசத்காரிய வாதிகளாக லின் அவர்கள் மதங்களில் சிறிதளவேனும் அங்கீகார யோக்யமன்று. ஆக லின் அவைகளும் நிராகரிக்கப் பட்டனவேயாகும்.

## 5. போக்த்ரா பத்யதி கரணம்.

13–வது சூத்திரம். அவதாரிகை:—மனோவாக்குக் காயங்களுக் கெட் டாத பிரம்மத்தைக் குறித்து தர்க்கம் ஸ்திரமுடையதாகாது என்று முந்திய அதிகரணத்தில் போதிக்கப்பட்டது—ஜகத்தின் பேதங்கள் ஸ்திரமுள்ளன வாக விருத்தலின் அவற்றைக்குறித்து அது பிரமாணமாகலாம் என்றும், பின்

ணங்களாகிய கடபடங் (ஆடை) கள் பின்னப் பொருள்களாகிய மண்நூல் இவைகளால் உற்பத்தியானதாகத் தர்க்கத்தினலல்லவா நாம் தெரிந்து கொள்ளுகின்றோம் என்றும், அவ்வாறே பிரபஞ்சத்தில் நாநா பேதங்களும் நாநா காரணங்களினின்றும் தோன்றியிருக்க வேண்டுமேயன்றி, ஒரு காரணத்தினின்றும் தோன்றுயிருக்கமாட்டா என்றும் பூர்வபக்ஷிகள் ஆக்ஷேபிக்கின்றனர். இந்த ஆக்ஷேபம் வேதாந்தமதத்தைப் பாதிக்காது என்று காட்டி இச் சூத்திரம் நிரூபிக்கின்றது.

சூ. 13. போக்த்ரா பத்தேரவிபாகச்சேத்ஸ்யால் லோகவத்.

பதவுரை:—அவிபாகச் சேத்=பிரம்மமும் ஜீவப்பிரபஞ்சங்களும் அபின்னங்களாயிருந்தால், போக்த்ராபத்தேः=போக்த்ருத்துவ தோஷம் உண்டாவதால் (பிரம்மமே காரணம் என்னும் வாதம் அயுக்தம் என்று ஆக்ஷேபம் வந்தால்) லோகவத்=கடலேயும் அதன் அலேகளேயும் போலவே, ஸ்யாத்=பிரம்மத்தினிடத்து போக்த்ரு போக்கிய விபாகம் உண்டாகின்றது.

கருத்து:—போக்துரு (அனுபவிப்பவன்) போக்கியம் (அனுபவிக்கப்படும் பொருள்) இவற்றின் பாகுபாடு (இரண்டும் வெவ்வேறு என்பது) உலகத்தில் பிரசித்தமல்லவா? ஜீவர்கள் போக்தா; விஷயங்கள் போக்கியம். இவை இரண்டும் பிரம்மத்தைவிடப் பின்னமானவையல்ல என்று கூறினல் போக்தா போக்கியமாகவும், போக்கியம் போக்தாவாகவும் ஆகவேண்டியிருக்கும். மேலும் பிரம்மமும் ஒரு காலத்தில் போக்தாவாகவும் போக்கியமாகவும் ஆக வேண்யிடிருக்கும். இது அயுக்தமல்லவா? ஆகையால் அத்விதீய பிரம்ம காரண வாதம் பொறுத்தமுடையதன்று" என்று இவ்வாறு பூர்வபக்ஷிகள் கூறும் வாதம் சரியன்று என்பது உலகப்பிரசித்தமான திருஷ்டாந்தத்தால் தெளிவாகின்றது. எப்படியெனில்.

சமுத்திரத்தின் விகாரங்களாகிய அலே திவலே நுரை குமிழி முதலியவை ஜலத் தன்மையால் அக்கடலினும் அன்னியமாகாவிடினும் ஒன்றற்கொன்று வேறுணவை என்னும் விவகாரம் ஏற்பட்டிருக்கின்றதல்லவா? அவ்வாறு வேறுபாடு ஏற்பட்டிருந்தாலும் அவை கடலினும் பின்னமாக இருக்கவில்லே. இப்படியே போக்துரு போக்கியங்கள் ஒன்றற்கொன்று பின்னமானவையாயிருந்தும் பிரம்மத்தினும் வேருகாதிருக்கின்றன என்றறிக.



# பழந் தமிழ்நாடும், பாரதியாரும்

[கோட்டாறு-தே. ப. பெருமாள்.]

நாம் பிறந்தது இத்தமிழ்நாடு என்று எண்ணும்போது நமது உள்ளத்தில் இன்பம் ஊறுகின்றது. அன்பு பெருகுகின்றது. வீரந் ததும்புகின்றது. அவ்வின்ப அன்பு வீரவெள்ளத்திலே நமது உடலும் உயிரும் ஒருங்கே தோயப்பெற்றதாய் கரைகாணாது தவித்து மகிழுகின்றது.

நாம் பிறந்தது தமிழ்நாடு. வளர்ந்தது தமிழ்நாடு. நமது அன்னை குழவிப் பருவத்தே நமக்கு அமுதூட்டி அன்புப் பாடலாலும் இன்ப ஆடலாலும் நம்மை மகிழ்வித்து இன்பம் கொண்டதும் இந்நாட்டிலேயே. நாம் மண்ணகத்தே மாதரார் முகத்தினையும் மடமயிலார் இசையினையும், விண்ணகத்தே வானிரவியையும் விண்மீன் குழுவையும், கானகத்தே களிமயிலாடலையும் இளங்குயிலின் பாடலையுங் எழில்மானின் ஓட்டத்தையும், கண்டு. கேட்டு, மகிழ்ந்ததும் இந்நாட்டிலேயே. உயிரனைய நட்டாருடன் உயர்மலைச் சாரலடைந்து ஆங்குள்ள பொழில் புகுந்து எழில் மலர் கொய்து, இன்பத்தே அருவியாடி, மந்தமாருதம் நுகர்ந்து, தீங்குழலூதி, தீம்பாடல் சாற்றி சிந்தை உவந்ததும் இந்நாட்டிலேயே. நாம் கல்விக் கழகமேறி பல்கலை பயின்று அவற்றின் பயனைத் துய்த்து வருவதும் இவ்வருமைத் திருத்தமிழ் நாட்டிலேயேயன்றோ!

இந்நாட்டிலேயே நமது தாயும் தந்தையும் தோன்றினர். அவர்கள் குழவிப் பருவத்தே மழலைச் சொல் மிழற்றியதும், தளர்நடை பயின்றதும் இந்நாட்டிலேயேயாம். நமது அன்னையர் கன்னிப் பருவம் எய்தப் பெற்றதும் இங்குதான். அவர்கள் கன்னிப்பருவம் எய்தப்பெற்று வெண்மதிநாலும் தண்ணிலவிலே விளையாடி, விரிபூஞ்சோலையை அடுத்த மணி நீரப் பொய்கையிலே புனலாடி மகிழ்ந்ததும் இந்நாட்டகத்தேயாம். அதன் பின்னர் அவர் மணவினை முடித்ததும், தங்கொழுநரை விழியினும் உயரியதாய்ப் போற்றி விழுமிய உணவளித்து வேண்டுவன செய்து போற்றியதும் இந்நாட்டிலேயே. ஆலயம் போந்து அழகோடும் அண்ணலைத் தொழுது அவன் அன்புபெற்று அருளொடும் வாழ்ந்து வந்ததும் இவ்வழகிய செந்தமிழ் நாட்டிலேயேயாம்.

இவ்வழகிய நாட்டிலேயே நமது அன்னையரின் முன்னையரும் தந்தையரின் முந்தையரும் உதித்தனர். அவர்கள் பலதிற இன்பந் துய்த்ததும் இங்கேயே. அவர்கள் தம் உள்ளத்தே தோன்றிய உயரிய கருத்துக்களால் ஓம்பியதும் இப்பொன்னாட்டிடையே. இஃதனைத்தும் இவ்விருபதாம் நூற்றாண்டைத்

தெய்வக் கவிஞர் செந்தமிழ் பாரதியார் தம்பாவின்கண் அழகாக எடுத்துரைக்கின்றார்.

"எந்தையுந்தாயு மகிழ்ந்து குலாவி
யிருந்தது மிந்நாடே—அதன்
முந்தையராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே—அவர்
சிந்தையிலாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே." என்றும்

"இன்னுயிர் தந்தெமை யீன்றுவளர்த்தரு
ளீந்தது மிந்நாடே—எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள்கூறி
யறிந்தது மிந்நாடே—அவர்
கன்னியராகி நிலவினி லாடிக்
களித்தது மிந்நாடே—தங்கள்
பொன்னுட லின்புற நீர்விளையாடியில்
போந்தது மிந்நாடே."

என்றும் கூறினர்.

தமிழ் நாட்டிலே பண்டை நாளில் கல்வி விளக்கமுற்றிருந்தது. பண்டைத் தமிழர் ஒவ்வொருவரும் கல்வியைத் தங்கண்ணெனக் கற்றுவந்தனர். ஆங்காங்கே கல்விக் கழகங்களும் நிறுவப்பெற்றிருந்தன. தமிழர் வெறும் ஏட்டுக் கல்வியைமட்டும் கற்றனரல்லர். அன்னார் ஏட்டுக் கல்வியுடன் இயற்கைக் கல்வியையும் கற்றுவந்தனர். மன்பதையை மாபெருங் கழகமாகக் கொண்டு ஒவ்வொரு இயற்கைப் பொருளையும் நுணுகி ஆராய்ந்து அவற்றின் பெருமையை உலகிற்குக் காட்டி வந்தனர். அஃதுடன் சமயபாடங்களையும் தமிழர் விரும்பிக் கற்றனர். சமய ஒழுக்கங்களையும் சிறிதும் வழுவாது தழுவிவந்தனர்.

## தாய்மொழித் திறன்

பண்டைத் தமிழ் நாட்டில் தாய்மொழி நன்கு ஓம்பப்பெற்று வந்தது. ஒவ்வொரு தமிழரும் தம் தாய்மொழியாகிய தமிழில் நன்கு தேர்வுபெற்றிருந்தனர். அன்றில ஒவ்வொருவரும் தம் தாய்மொழியில் கவிகள் கவின்பெறப் பாடவல்லவராய இருந்தார். அஞ்ஞான்று புலவர்களும் தம் தாய்மொழியாகிய தமிழுக்கு நற்காவியங்கள் பல செய்து கொடுத்தனர் உலகம் போற்றும் விழுமிய நூலாம் திருக்குறள் எனும் தேனொழுந்ததும் நமது திருநாட்டகத்தேயாம். தமிழ்த்தாய்க்கு ஒரு பெருமிழையாக விளங்கும் ராமாயணம் செய்து கொடுத்த புலவன் கம்பன் பிறந்த நாடும் தமிழகமேயாம். தமிழன்னையின் நெஞ்சத்திலே நீண்டொளிரும் ஆரமாம் சிலப்பதிகாரத்தனை செய்த புலவன் இளங்கோ எழுந்த நாடும் இத்தீந்தமிழகமே இத்தலைசிறந்த பெருமை கொண்ட நமது தமிழகத்தைப் பாரதியார்.

"கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்விதமாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு. என்றும்

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளுஞ் சிலப்பதிகாரமென்றோர் மணி
யாரம்படைத்த தமிழ்நாடு. என்றும்,

தமிழ் நாட்டுப் புலவரின் பெருமையினை,

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை. உண்மை
வெறும் புகழ்ச்சியில்லை"

என்றும் அழகாகப் பாடி புகழ்ந்துள்ளார்.

இவ்வாறு பழந்தமிழ் நாட்டாரின் கல்வியையும் அவர்தம் மொழிப் புலமையையும் புகழ்ந்த பாரதியார் அவர் தம் வீரத்தையும் புகழ்ந்து கூறுவாராயினர்.

## பண்டைத் தமிழர் வீரமும் வெற்றியும்.

பழந்தமிழ் நாட்டார் அஞ்சா நெஞ்சுடையவர் மலை பெயர்ந்து வரினும், வானிடிந்து வீழினும் மனங்கலங்கா இயல்பினர். அவரது வாழ்வில் வீரம் பெருகியிருந்தது. பண்டைத் தமிழ்நாட்டு மன்னரின் மாண்பு இன்று காறும் இலங்கச் செய்த பெருமை தமிழ் வீரருக்கே உரியதாகும். அஞ்சா நெஞ்சுடன் பிறநாடு போந்து இவர்கள் இயற்றிய போரே பண்டைத் தமிழ் மன்னரின் வெற்றிக்கு உரியதாய் அமைந்தது. கலிங்க நாட்டில் சோழ மன்னனின் வெற்றிக்குத் தலைமையாய் இருந்தவரும் பண்டைத் தமிழ்வீரரேயாம். வடநாட்டில் ஆயிரமன்னரையும் ஒருங்கே கங்கை நதிக்கரையில் புறமுதுகிட்டோடச் செய்த செங்குட்டுவன் பெருமைக்கு உரியராய் அமைந்தோரும் தமிழ் வீரரேயாம். இவர்கள் அந்நாடுகளில் அருஞ்சமராற்றி வெற்றிக்கொடி நிறுவி அங்குத் தம் கொடியினையும் முத்திரையையும் நாட்டி வந்தனர்.

## பெண்டிர் வீரம்

இத்தகைய தமிழ் வீரர் வாழ்ந்த பண்டைத் தமிழ் நாட்டில் பெண்களும வீரஞ்செறிந்த வாழ்வையே கொண்டிருந்தனர். அந்நாளில் உடல் பழுத்த ஒரு முதியவளின் புதல்வன் போருக்குச் சென்றான். அவன் போருக்குச் சென்ற பின்னை மாற்றலர் சிலர் அவள் மாட்டணுகி "அம்மே! நினது புதல்வன் போர்முகத்தே பகையோர் வலிக்காற்றாது புறமுதுகிட்டோடினன்." எனப் பொய்யுரை புகன்றனர். இஃதை உண்மையென நம்பிய அம்முதி

யான் மனம் மாழ்கியவளாய் வீரமுற்றெழுந்து உறைவாள் கையகங்கொண்டு "அங்ஙனம் என்மகன் போர்முகத்தே புறமுதுகிட்டோடியிருப்பானாயின் அவனுக்கு அமிழ்து கொடுத்தோம்பிய என் முலையை இன்னே அறுத்து வீழ்ப் பாற்படுத்துவேன்" என சபதச் சொற்கள் சொற்றனளாய் போர்முகஞ் சென்றாள். ஆண்டு மலையெனக் குவிந்த பிணங்களைக் கிளறி நோக்கினள். அங்கே தன்னுயிரனைய ஒரு மகனைக் கண்டாள். அவன் அகல் மார்பகத்தே ஊறு எய்தப்பெற்று மடிந்துகிடந்தான். இஃது கண்ட அவள் இன்பம் எய்தப் பெற்றவளாய் ஊரவருரை பொய்யுரை எனத் தேறி தனதில்லம் திரும்பினள். இன்னும் ஓர் மாது போர்முகஞ் சென்ற தனதிறைவன் அவண் இறந்து பட்டான் என்ற செய்தி அறிந்ததும், தனது அழகிய ஒரு புதல்வனை புனை பொருட்களால் புனைவித்துப் போர்முகம் மலைதற்கு அனுப்பினள்; என்னே பண்டைத் தமிழர் வீரம்! பெண்டிர் வீரம்! இதை நமது பாரதியார்,

"......................உயர்
வீரம் செறிந்த தமிழ்நாடு" என்றும்,

விண்ணை யிடிக்குந் தலையிமயம்—எனும்
வெற்பையடிக்கும் திறனுடையார்—சமர்
பண்ணிக் கலிங்கத்திருள் கெடுத்தார் தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ்நாடு"

என்னும் பொன் மொழிகளால் புகழ்ந்து கூறினர்.

## கைத்தொழில் உயர்வு

இத்தகைய வீராய் வாழ்ந்து வெற்றிக்கொடி நிறுவிய பண்டைத் தமிழ் நாட்டார் கைத்தொழிலிலும் சிறந்தவராய் இருந்தனர். இற்றை நாளையத் தமிழரைப்போல் பண்டைத் தமிழர் உண்ணும் பொருட்களாம் நெல், அரிசி முதலியன பிற நாட்டினின்றும் வரவழைத்திலர். உழவின் பெருமையை அறிந்த அன்னார் பயிர்த்தொழிலைத் தம் தலைமைத் தொழிலாகக்கொண்டிருந்தனர். அத்தொழிலை தன்னாட்டிலெங்கணும் செழுமையுறச் செய்தனர். ஆதலின் அவர்கட்கு செழிப்புமிக்கது. தம்முணவிற்குப் போதியதுபோக மீதியை ஏழையோர்க்கீந்தும் இரப்போர்க்குக் கொடுத்தும் அஃதினும் மிஞ்சியதை பிற மக்கட்கும் விற்றுவந்தனர். அஃதன்றித் தமக்கு வேண்டிய உடையினையும் தாமே செய்துகொண்டனர். பண்டைத் தமிழர் உடை நெய்தலில் வல்லவராய் இருந்தார். அவர்கள் பஞ்சினாலும், பட்டினாலும், மயிரினாலும், கண்ணைக் கவருந்தன்மையதாய் கவின் மிக்க மெல்லிய உடைகள் செய்து வந்தார். அந்நாளில் தமிழர் தமக்குப் பிறநாட்டினின்றும் உடைகள் வரவழைத்துக் கொண்டாரல்லர். தமக்கு வேண்டியவற்றைத் தாமே செய்துகொண்டனர். மேலும் அஞ்ஞான்று வெண்கலம், செம்பு, இரும்பு முதலிய கனிகளில் கலன்கள் செய்யும் தொழிற்சாலைகளும் தமிழ் நாட்டில் மிக்கிருந்தன. கல்லிற் சிலை செதுக்கும் சிற்பிகளும், மரத்தில் பணி இயற்றும் தச்சரும், பொன்னில் கல்லோடு இழை இயற்றும் தட்டாரும் தமிழ்நாட்டில் மிகுந்து வாழ்ந்து தமது தொழிலை அழகுறச் செய்துவந்தனர்.

அந்நாளில் தமிழ்நாட்டில் வாணிகம் பெருகி இருந்தது. தமிழர் 'திரை






# 41. ஐரோப்பாவைக் கலக்கிய பிரஞ்சுப் புரட்சி.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

அமெரிக்க சுதந்தர யுத்தம் பெயரளவில் தாய் நாட்டு ஆங்கிலேயருக்கும் அமெரிக்க குடியேற்ற நாட்டு ஆங்கிலேயருக்கும் நடந்ததாலும் உண்மையில் பிரஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் நடந்த யுத்தமேயாகும் என்பதும், சுமார் 1670-ம் வருஷம் முதற்கொண்டே உலக வியாபார சம்பந்தமாகவும், குடியேற்ற நாடுகள் சம்பந்தமாகவும் பிரான்ஸும் இங்கிலாந்தும் நேரிலும், இதரர்களுக்கு உதவி செய்யும் முறையிலும் விரோதப்பட்டு யுத்தங்களை நடத்தி வந்தன என்பதும், ஸ்பெயின் வார்சு யுத்தம், ஆஸ்ட்ரிய வார்சு யுத்தம், எழாண்டுப் போர் முதலியன அதற்கு அத்தாட்சிகள் என்பதும், பொதுவாகவே இரு தேசங்களுக்கும் நிகழ்ந்ததொரு 150 ஆண்டுப் போர் ஆனகாலம் என்பதும் வாசகர்களுக்கு விளங்கி யிருக்கலாம். அதனால் சிறு பிள்ளைகளின் சண்டை போன்று, ஏதேனும் பேருக்கு ஒரு காரணம் வைத்துக் கொண்டு பொது குரோதம் கொண்டே வீம்புக்குச்

---

கடலோடியுந் திரவியந் தேடு' என்ற பொன்மொழியைத் தம் உள்ளத்தே கொண்டு கடல் கடந்து வாணிபஞ்செய்து பொருளீட்டி வந்தனர். அஞ்ஞான்று சீனர், யவனர், சிங்களர் முதலியோர் தமிழரோடு நெருங்கி வாணிபம் புரிந்தவராவர். அவருள் தலைமைசான்றவர் கிரேக்க நாட்டில் வதிந்த யவனரேயாம். இவர்கள் தமிழரோடு நெருங்கிய உறவுகொண்டு உயரிய முறையில் வாணிபஞ் செய்துவந்தனர். தந்நாட்டுப் பொருட்களை இந்நாட்டிற் குதவியும் இந் நாட்டுப் பொருட்களை தந்நாட்டிற் குதவியும் வந்தனர். இவர்களில் பலர் பண்டைத் தமிழர் துறைமுகங்களில் வதிந்துவந்தனர். இவரது இருக்கை, வாணிபத்தின் உயர்வு முதலியன பழந்தமிழ் நூல்களிற் பாக்கக் காணலாம். இவ்வாறு தமிழர் அயல்நாட்டு மக்களோடு அன்புடன் நெருங்கிப் பழகி வாணிபத்தை உயர்வுற நடத்திவந்தனர். இவ்வாறு தமிழர் புரிந்த வாணிபத்தையும் அவர்களது கைத் தொழிலையும், கல்விச் சிறப்பையும் நமது பாரதிப் பெருமான்,

"சீனமிசிரம் யவனரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக்—கலை
ஞானப்படைத் தொழில் வாணிபமும் மிக
நன்று வளர்த்த தமிழ்நாடு"

என்று அழகாகக் கூறித் தம் நாட்டைப் புகழ்ந்து சென்றார்.

சண்டை நடத்தினார்கள் என்பது மிகையாகாது. (ஆக தற்போது தோன்றுவது போன்ற வகாதிபத்திய வெறியும், வியாபார லாப வெறியுமே அப்போதைய யுத்தங்களுக்குக் காரணங்கள். நியாய அநியாயம் என்ற பேச்சு இம்மாதிரி வெறி பிடித்தவர்களுக்கு "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" ஆகும் என்பது சரித்திரம் போதிக்கும் ஒருண்மை.

அமெரிக்க யுத்தம் ஆங்கிலேயருக்கு "வயது வந்த மக்களை எப்படி நடத்துவது?" என்ற அறிவைக் கொடுத்தது மூந்தின கட்டுரையில் குறிப்பிடப்பட்டது. பிரான்ஸுக்கோ எனில் பெரிய விபரீதமாக முடிந்தது. நீடித்த கால யுத்தம் பிரான்ஸ் கஜானாவைக் காலியாக்கியது. பிரான்ஸின் கீர்த்தி பெற்ற அரசனாக விருந்த லூயி XIV என்பவனைப் பற்றி இத் தொடர்ச்சிகளில் குறிப்பிட்டிருக்கிறோம். அவன் காலத்தில் பிரான்ஸ் தேசத்தின் சகல அம்சங்களும் உன்னத நிலையிலிருந்தன. அரசனுக்கிருந்தது சர்வாதிகாரம். சேனை அக் காலத்திய ஐரோப்பிய சேனைகளுள் எல்லாம் பலமானது. ஆடம்பரமானது. அரச சபையும் மிக்க ஆடம்பரமானது. உலகில் சிறந்த வித்வான்களும், தொழிலாளிகளும் நன்கு ஆதரிக்கப்பட்டனர். பல விதங்களிலும் பிரான்ஸுக்கு நிகரான தேசம் ஐரோப்பாவிலேயே இல்லை என்பது சரித்திரப் பிரசித்தம். இந்த ஆடம்பரங்களின் ஸ்வபாவமான பலன் பணச் செலவுதான் என்பது யாரும் அறியக் கூடியதே, போதாக் குறைக்கு இந்த ஆடம்பரம் வெகு காலம் நீடித்திருந்தது. லூயி XIV சிறந்த ராஜ தந்திர நிபுணன். தன் வாக்குக்கு மறுவாக்கே கூடாது என்ற போக்குடையவன். அவன் 1716-ல் மரண மடைந்தான்! பொதுவான பழமொழி, "செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு!" என நாடோடியாய் வழங்குவதுண்டு. அவன் இறந்த பிறகும் ஆடம்பரங்களும், அயல்நாட்டு யுத்தங்களும், அரசியலில் சூது வாதுகளும் குறைந்தன இல்லை. இதனாலும் நாட்டில் வறுமை வலுத்தது.

இந்த வறுமை நிலையில் பொது ஜனங்களின் நிலைமை மிகச் சீர்கேடடைந்திருந்தது. அவர்கள் மிருகங்களை விடக் கேவலமான நிலைமையில் இருந்தனர். அரசியல் உரிமை யென்பது எள்ளளவும் கிடையாது. உரிமைகள் வேண்டாம் என்று இருந்து விட்டாலும், வரிச்சுமையின் பளு பூராவும் அவர்கள் தலையிலேயே சுமத்தப்பட்டிருந்தது. மாடுகளைப் போல் அடிக்கப் படலாம். விற்கப்படலாம். வேலை வாங்கப்படலாம். மாறு கால் மாறு கை வாங்கப்படலாம். அங்கஹீனப் படுத்தப்படலாம். இவ்வளவுக்கும் முறையிட்டுக் கொள்ள மார்க்கமும் இல்லை. இவர்களைப் பற்றிச் சிந்திப்பாரெவரும் சுகவாசிகளில் கிடையாது. பாரதியார் "கொஞ்சமோ இவர் துயர்கள்?" என்று பரிதபித்திருக்கும் நிலைமைதான் அந்தத் தேசத்தில் அப்போது இருந்தது. "நாளெல்லாம் வேலை செய்து நாட்டினையே வாழவைத்த ஏழைகளின் பட்டினியை"த் தீர்க்க ஒரு வழியுமில்லாதிருந்தது! பிரபுக்களின் போக்கு இவ்வாறாக கருணைவள்ளலின் பக்தர்களும், பிரதிநிதிகளும் ஆன மதத் தலைவர்களை என்றால், அவர்களும் பிரபுக்களுக்குக் குறைவில்லை. சொல்லப் போனால் பிரபுக்களை நல்லவர்களாக்கி விட்டார்கள் என்று சொல்லலாம். இவர்களும் ஆடம்பரங்களுடன் வாழ்ந்தனர். பிரபுக்களுக்குத் தொலைத்தது போக மீதி யுள்ளதைப் பிடுங்கித் தின்னலானார்கள். தங்களுக்குக் கீழுள்ள குடிகளை இன்னும் அதிகமாகத் துன்புறுத்தலானார்கள். சௌகரியங்களையோ ஆடம்பரங்களை

யோ எள்ளளவும் குறைத்துக் கொண்டார்களில்லை. ஆக உழைப்போ அசுர உழைப்பு! உரிமைகளோ அணுவளவும் கிடையா. "கஞ்சி குடிப்பதற்கிலார்! கண்ணிலாக் குழவிகள் போல் பிறர் காட்டிய வழியில் சென்று மாட்டிக் கொள்வார்! எண்ணிலா நோயுடையார்! எழுந்து நடப்பதற்கும் வலிமையிலார்!" என்று விவரித்தது அவ்வளவும் பொருந்தும் என்பது மிகையாகாது.

இம்மாதிரி கொடிய நிலையில் மனோ வேகம் அதிகரிக்கும் என்பது அனுபவ பூர்வமானது. அதிலும் முக்கியமாக ஜனங்களின் கஷ்டங்கள் பல அறிவாளிகளின் மனங்களைப் புண்படுத்தின. அவர்கள் ஜனங்களின் பலவித கஷ்டங்களுக்கு யாது காரணம் என்பதை ஆழ்ந்து சிந்திக்கலாகி, அவரவர்களுக்குத் தோன்றிய எண்ணங்களை முதலில் மறை முகமாகவும், பிறகு பகிரங்கமாகவும் வெளியிடலாயினர். அப்படி வெளியிடும் போது அரசாங்கத்தின் நிர்வாகத்தை அக் குற்றங்கள் சாருவது சகஜமாகி, சமயோசிதம் போலும், உசித மில்லாமலும், நியாயமில்லாமலோ, நியாயமாகவோ, வெளியிடும் பேர்வழிகளுக்குக் கஷ்டங்கள் ஏற்படுவதும் அனுபவ சித்தமானது. கக்ஷிப் பிரதிகக்ஷிகள் ஏற்பட்டு அல்லல்களும் குழப்பங்களும் உண்டாவது இயற்கை. ஆகவே "ஜனங்கள் ஆதியில் இயற்கையோடியைந்த வாழ்க்கை நடத்தினார்கள். அப்போது எல்லாரும் சந்தோஷமாக வாழ்ந்தார்கள். நாளடைவில் நாகரீகம் முதிர்ந்து, வலியவர்கள் எளியவர்களைப் பிழிந்து வாட்டி சொத்துச் சுதந்தரங்களைப் பறித்து, "நல்லவர் நசுங்கிடவே நயவஞ்சகர் தன்னலம்' வளர்ந்து, சமூகமே கஷ்டப்பட நேர்ந்து விட்டது! அப்படி வாட்டுவதற்கு மூகாந்தரமே கிடையாது. ஆகவே ஆதியில் இருந்த இயற்கையோடியைந்த இனிய வாழ்வுக்குத் திரும்புவதே ஜனசமூகத்தின் தாங்காத கஷ்டங்களுக்குக் கை கண்ட மருந்தாகும்" என்று கொள்கைகளைப் பிரகடனம் செய்து வந்தார்கள். இதற்குத் தான் "Return to Nature" (இயற்கைக்குத் திரும்பும்படி அறை கூவுதல்) என்று சரித்திரங்கள் சொல்லும். "அந்தப் பழைய இயற்கை வாழ்வில் 'Equality' சமத்துவம் 'Fraternity' சகோதரத்துவம் 'Liberty' சுதந்தரம் பொலிந்திருந்தன! அம் மூன்றும் ஏற்பட்டால் தான் ஜனசமூகத்திற்கு நன்மையேற்படும். அதற்குத் தடையாக நிற்பவர்கள், ஜனங்களை யடிமைப்படுத்துபவர்கள், அரசனும், பிரபுக்களும், பணக்காரர்களும், என்பதுபோன்ற குறிப்புகளும் நாட்டின் பலபாகங்களிலும் கொடுக்கப்பட்டன. ஆகவே "மனிதர் நோக மனிதர் வாழும் வாழ்க்கை, மனிதர் உணவை மனிதர் பறிக்கும் மனித சுபாவம்" இவைகளுக்கெதிரான உணர்ச்சி, கஷ்ட மிகுதியினால் எந்தக் கஷ்டத்திற்கும் அஞ்சாத நம்பிக்கை யிழந்த போக்கு சீக்கிரத்தில் வளர்ந்து, "தனி யொருவனுக் குணவில்லை யெனில் ஜகத்தினை யழித்திடுவோம்! ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில்" என்ற ஆவேசம் ஏற்பட்டுவிடும் நிலைமைக்கு வந்துவிட்டது. எந்த சரித்திரத்திலும் சவிஸ்தாரமாக எழுதப்பட்டிருப்பது பல அறிவாளிகளும் உணரக்கூடிய விஷயமாகும். (பொதுவாக தற்போதுள்ள சங்கடநிலைக்குப் பல அறிவாளிகளும் மேடைப் பிரசங்கமாக 'கிராமத்திற்குத் திரும்புங்கள்' என்று வேலையிலாது தவிக்கும் யுவர்களுக்கு உபதேசக்கிரமமாக இருப்பதை பத்திரிகை படிக்கு மன்பர்கள் அறிகிறார்கள். காந்தியடிகளும் கிராமப் புனருத்தாரணத் திட்டத்தை வகுத்திருக்கிறார். அரசாங்கமும் அதற்கு வேண்டிய முஸ்தீபுகளைச் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியில் இருப்பதாகத் தெரிகிறது!)

இந்த விதமாக உணர்ச்சியை ஜனங்களிடம் பரப்பி முதல் மனிதன் தோன்றி முதல் பெண் ஏற்பட்ட போது பணக்காரன் என்பவன் ஏது?" என்ற போதித்து, உலகத்திலேயே பயங்கரமான புரட்சியை யுண்டாக்கிய வர்கள் ஆசிரியர்களே. ரூஸோ (Rousseau) வால்டேர் (Voltairre) எமிலி (Emile) என்பவர்களுடைய பிரசங்கங்கள் என்று எல்லா சரித்திர புஸ்தகங் களிலும் காணலாம். (நமது காலத்திலும் பால கங்காதர திலகர், கனம் ஸ்ரீனி வாஸ சாஸ்திரிகள், கோகலே போன்றவர்கள் ஜனங்களின் உணர்ச்சிப் போக் குக்கு உதாரணமாக இருக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட வேண்டிய விஷயம்). அதிலும் பிள்ளைகளின் மனதுகளில் இந்தமாதிரியான விவரங்கள் படுவது மிகவும் அவசியமானதேயாகும். அப்போது பழைய கால விஷயங் களைத் தெரிந்து கொள்ள ஹேதுவாகி சம்பவங்களின் போக்கை ஒருவாறு நிர்ணயிக்க அவர்களுக்கும் சுலபமாகும். மேலும் அவர்கள் வருங்கால பிர ஜைகள் அல்லவா? நிகழ்ச்சிகளின் தத்துவங்களை மனதில் குழப்பமின்றி யுணர்ந்து கொண்டு நடந்து கொள்ளலாம். தேச நிர்மாண வேலைகளுக்கும் அவர்கள் உசிதப்படி தயாராக்கலாம். இவ்வளவில் சரியான முறைகளில் புரிந்து கொள்ளப்பட்ட சரித்திர பாடம் உதவி செய்யும் தன்மை சிந்தித் துக் கொள்ளத்தக்கது.

நிற்க நீடித்தகால யுத்தங்களினால் கஜானா காலியானது மட்டுமல்ல. தேசியக் கடனும் விஷம் ஏறுவது போல் ஏறலாயிற்று. பணமுடையோ சொல்லி முடியாது. பணமுள்ள பிரபுக்களோ மத குருமார்களோ தங்கள் தங்கள் நிதிகளில் இம்மியளவும் கொடுக்கச் சம்மதிக்க வில்லை. அரசாங்கமோ ஸ்தம்பித்துவிட்டது. தேசத்திலிருந்த சட்டசபையான (States General) ஸ்தாபனத்திலோ, பிரபுக்களுக்கும் மதகுருமார்களுக்கும் பிரதிநிதித்வம் இருந்ததே யொழிய நாட்டுப் பொது மக்களுக்குப் பிரதிநிதித்துவமே கிடை யாது. ஆக, செய்யப்பட்ட சட்டங்கள் எல்லாம் அவைகளின் நன்மைக்காக வே செய்யப்பட்டன. பாதுகாப்புகளும் அவர்களுக்கே யமைந்திருந்தன. பொது மக்களுக்கு எவ்வளவு உபத்திரவங்கள் விளைவிக்கலாமோ அவ்வளவும் அச் சபையால் ஏற்பட்டன. ஆனால் அவர்களுடைய குறைகளை எடுத்துச் சொல்லவோ உரிமைகளைச் சம்பாதித்துக் கொள்ள வழி தேடவோ மார்க்க மில்லை. அதே சமயத்தில் இங்கிலாந்தில், பார்லிமெண்ட் சபைக்குப் பொது ஜனங்களின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அதிகாரம் பெரும் பாலும் பொதுஜன சபையிடமே இருந்தன. வரிகள் விதிப்பது அந்தச் சபையின் சம்மதம் பெற்றுத் தான் ஆக வேண்டும். ஜனங்களுக்கு உரிமை களா? அரசனுக் குரிமைகளா? என்ற விஷயம் ஒழுங்கான போராட்டத் திற்குப் பிறகு பொது ஜனங்களுக்குத்தான் உண்டு என்றாயிற்று. பொது ஜனங்கள் ஒப்பம்வைத்தது தான். அவர்கள் ஆமோதித்தது தான் மதத்திட் டம். அவர்கள் விரும்பிய பேர்வழிதான் அரசன். அந்த அரசனுக்கு அவர்கள் அனுமதித்தது உரிமை. செலவுக்குப் பணமும் வருஷாவருஷம் பொதுஜன சபையினால் அங்கீகரிக்கப்பட வேண்டும். நியாயாதிபதிகள் அரசனுக்குக் கட் டுப்படாதவர்களாக இருக்க வேண்டும். பொது ஜனங்களின் எந்த உரிமைக் கும் பாதகமாக சட்டத்தின் பிரயோகம் கூடாது. அரசாங்கத்துடன் எதிர்த் துப் போராடுபவர்களுக்கு ஜீவாதாரமான உரிமைகள் பறிக்கப்படவோ, சிறையி லடைக்கப்படவோ கூடாது. அதே போன்று "வியாபார குடியேற்ற

நாட்டு விஷயங்களிலும்" என்ற நிலைமையைக் கண்ட பிரஞ்சு ஜனங்களுக்கு மனம் எவ்வாறு கொதித்திருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும். இவ்வளவு சௌகரியங்களினால் பலம் பெற்றிருந்த இங்கிலாந்து அரசாங்கத்தையே அமெரிக்க குடியேற்ற நாட்டு வாசிகள் ஐக்யப்பட்டு எதிர்த்துச் சண்டை செய்து வெற்றி பெற்று, தாங்கள் சுயேச்சையுள்ள ஐக்கிய நாட்டு வாசிகள் ஆனார்கள் என்ற விஷயமானது, சோர்ந்து கிடந்த பிரஞ்சு மாக்களையும் மக்களாக்கியது. ஏனெனில் ஒரு அரசாங்கத்தை எதிர்த்துப் பலம் பெறுவது முடியுமோ என்று அதைரியங் கொண்டிருந்தார்கள். ஆனால் அப்போது அவர்கள் அறிந்தது பலாத்கார முறையாகும் என்பது வெள்ளிடைமலை. ஆத்ம சக்தி அஹிம்சை முறையின் பெருமை "உலகத்திற்கே யொரு புதுமை!" என்பதும் பெருமை யளிக்கக் கூடியதாகும்.

நிலமான்ய முறை ஒரு விதத்தில் அடிமைத்தனத்தை வளர்ப்பது. மக்களின் சுதந்தரத்தைப் பறிப்பது. அந்த முறையின் தீமைகளை யகற்றி வெற்றி வீரன் வில்லியம் காலத்திலேயே இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டதும், நாளடைவில் இங்கிலாந்து மக்கள் எவ்வெவ் விதங்களில் விடுதலை பெற்று ஆண்மக்களாயினர்" என்பதும் இத் தொடர்ச்சிகளின் போக்கில் எழுதப்பட்டன. ஆனால் பிரான்ஸில் ஆதியில் எந்த விதத்தில் ஏற்பட்டதோ அதே முறையில் அமுலில் இருந்து, அடிமைகள் சாசுவதமாகவும், பிரபுக்கள் மதகுருமார்கள் தங்கள் செருக்கில் சாசுவதமாகவுமே இருந்து, விடுதலைக்கு வழியின்றித் தவித்து உளங்குன்றி; அழிந்து கண்ணீருங் கம்பலையுமாக இருந்தனர் பிரஞ்சு பொதுமக்கள்! "ஏழைகள் அழுத கண்ணீர் கூரிய வாளொக்கும்! அதுவும் வழிவழி யீர்வதோர் வாளாகும்!' என்பது உண்மை. ஆனால் மேலே குறிப்பிட்ட பிரகாரம் விடுதலைக்கு வழி பலாத்காரத்தின் மூலமும் எங்கும் கேள்விப்படாத அகோரமான இரத்தஞ் சிந்துதலும் ஏற்பட்டுவிட்டது சரித்திர பூர்வமானது. ஆதியில் பிரஞ்சு மக்களின் பரிதாப நிலையில் அனுதாபங் கொண்ட பலர், அங்கு ஏற்பட்ட கோர நிலையை நினைத்து, மயிர்க்கூச்செறிந்து, திக்பிரமை கொண்டு வெகு தாராளப் போக்குள்ளவர்களையும் கல் நெஞ்சினராக்கி விட்டது சகஜமே. இந்தக் கட்டுரையில் பிரஞ்சுப் புரட்சிக்கு முன்பு பிரான்ஸின் பொது நிலைமை குறிப்பிடப் பட்டிருக்கிறது. இவைகளை மறுபடியும் சுருங்கக் குறிப்பிட்டு, பிரஞ்சுப் புரட்சி ஆரம்பித்த விதத்தையும் அதன் கொடூரமான போக்கையும், பிரான்ஸ் ஜன சமூகத்தில் ஏற்பட்ட விபரீத மாறுதல்களையும் அடுத்த வியாசத்தில் விவரித்தெழுதுவோம். பொதுப் போக்கிலிருந்து அறிந்து கொள்ளக் கூடிய விபரங்களை வாசகர்கள் உணர்ந்து கொள்ளுவது முக்கியம் என்பது மீண்டும் வற்புறுத்தப் படவேண்டிய விஷயமாகும்.



# *பொதுமறைப் பெருமை

—:(o):—

(தே. வீரராகவ அய்யங்கார்.)

திருவள்ளுவனாரின் குறள் தமிழ்க் கடலாகும். அதை என் சிற்றறிவாகிய நாழியைக் கொண்டு அளக்க முயல்கிறேன்.

திருக்குறள் எவ்வாறு பொதுமறையாகும்? அதன் பெருமை என்ன? என்ற இருதலைப்புகளின் கீழ் அகப்புறச் சான்றுகளுடன், ஒல்லும் வகை ஆராய விரும்புகிறேன்.

ஒரு காலத்திலே ஒரு புலவராலே ஒரு நூலியற்றப்படுமாயின், அந்நூல், அவர் காலத்தில் மட்டுமோ, அல்லது அவருக்குச் சற்றுப் பிற்காலம் வரையிலோ, அவர் வாழ்ந்த நாட்டிலேதான் பெரும்பான்மை போற்றப்படும் என்ற உண்மையை நீவிர் அறிவீர். இவ்வுண்மை எந்நாட்டுப் புலவர் நூல் மாட்டும் ஏற்புடைத்தே ஆனால், குறள் அத்தகைய நூலன்று. எக்காலத்தவரும் எந்நாட்டினரும் எம்மதத்தினரும் போற்றிப் பயிலும் நூலாக இது அமைந்திருக்கின்றது. இந்திய நாட்டிலுள்ள பல மதத்தோரும் வள்ளுவனாரைத் தம்மதத்தினராகக் கூறும் காரணத்தையும், பதினெட்டு மேனாட்டு மொழிகளில் அவர் நூல் மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டிருக்கும் காரணத்தையும் கருதின் குறளைப் பொதுநூல் என்றல் சாலும். மானிட வாழ்க்கை சிறப்புறுவது அவர்கள் பின்பற்றும் ஒழுக்கத்தாலாம். ஒழுக்கத்தை விளக்கும் நெறிகள் சான்ற நூல் "மறை" எனப்படும். "மறை" என்பது "வேதம்" என்ற ஆரிய மொழியால் குறிக்கப்படுகின்றதென்பர். தமிழர்களால் மறை எனக் கொண்டாடப்படும் ஒரு நூல் திருக்குறளாகும். இந்நூலின் பொதுத்தன்மையை விளக்கவந்த வெள்ளி வீதியார்,

"செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதம்குரியார் அந்தணரே ஆராயின் ஏனை
இதற்குரியார் அல்லாதார் இல்"

என்று வியந்து கூறுகிறார்.

சிறிது காலத்திற்கு முன்னிருந்து காலஞ்சென்ற ஆசிரியர் சுந்தரம் பிள்ளை "வள்ளுவர் தம் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்கள், உள்ளுவரோ மநுவாதி ஒரு குலத்துக் கொருநீதி" என்று இந்நூலை வாயாரப் புகழ்கின்றார். தேசீயக்கவி பாரதியார்,

---

[* திண்டிவனம் ஸ்ரீ. அம்பிகா கழகத்தின் ஆதரவில், திருவள்ளுவர் தினத்தன்று செய்த சொற்பொழிவின் திரட்டு.]

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ்
கொண்ட தமிழ்நாடு."

என்றும், 'யாமறிந்த புலவரிலே வள்ளுவர்போல், கம்பனைப்போல், இளங்கோவைப்போல் யாங்கணுமே கண்டதில்லை" என்றும் போற்றுகின்றார்.

இப்படிப் பண்டைய, இன்றைய புலவர்களாலே திருவள்ளுவர் புகழப்படுவதற்குக் காரணம் இவர் யாத்த நூலின் பொதுத்தன்மையேயாம்.

அதைத்தபடியாக இந்த நூலின் பெருமையைப்பற்றி ஆராய்வோம். குறளை நன்கு ஓதியுணர்ந்த பாதிரியார் ஒருவர், "Though Valluvar was a heathen, his tongue would never go to hell"

"திருவள்ளுவர் பதிதராயினும்—கிறிஸ்துவப் பரிபாஷை—
அவர் நா நரகஞ் செல்லாது."

என்று வள்ளுவரைப் போற்று முகத்தால் அவர் செய்த நூலைப் போற்றுகின்றார். மகாத்மா காந்தியடிகள் இந்நூலைப்பற்றிக் குறிப்பிடுங் காலத்தில் ("Thirukkural contains the highest and purest expressions of human thought", "மனித உள்ளத்திலெழக்கூடிய மிக உயர்ந்த, தூய கருத்துக்கள் திருக்குறளில் நிறைந்து கிடக்கின்றன" என்றார். வீரமாமுனிவர் என்னும் கிறிஸ்துவச் சாமியார், ஒரு தமிழறிஞரிடம் சென்று பல சோதனைகள் செய்து, குறளின் பெருமையை அறிந்தார் என்ற விஷயமும் நீங்கள் அறிந்ததே. அவர் செய்த சோதனைகளைச் சொல்லப்புகின் அது ஓர் அத்தியாயமாகும். காய்தல் உவத்தலின்றி, ஆராய்ச்சிக் கண்ணுடன் இந்நூலைப் பயில்வோர்,

"எல்லாப் பொருளும் இதன் பாலுள; இதன் பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்".

என்று கூறிய மதுரைத் தமிழ் நாகனார் உண்மைக் கூற்றை உணர்வர். ஒன்றே முக்காலடிகளாகிய குறட்பாக்களையுடைய ஒரு சிறு நூல் கடலனைய பொருட்களைத் தன்னகத்தே கொண்டிருக்கின்றதெனின்,

"மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞால முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து—"

என்று சொன்ன பரணரின் வார்த்தை எவ்வளவு பொருத்தமுடைத்தென்பதை நான் சொல்லவேண்டியதில்லை. சுருங்கச் சொல்லின் குறள் என்பது வாழ்க்கையில் ஏற்படக்கூடிய எவ்விதச் சிக்கலையும் போக்கிக்கொள்ள உபாயங்கூறும் ஓர் அகராதியாம். இலக்கிய மாண்பிலோ இணையற்றது.

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவர்
ஆய்க்கேட்க வீற்றிருக்கலாம்.'

என்ற நத்தத்தனார் உண்மையையே உரைத்தார்.

இனி, அகச்சான்றாகச் சில குறட்பாக்களை ஆராய்வோம்.

எந்தப் பக்குவ நிலையி லிருப்போருக்கும் அவரவர்கள் ஆற்றலுக்கும், அறிவுத்திறனுக்கும் பக்குவத்திற்கும் ஏற்பப் பொருள் தந்து நிற்பதே உண்மை நூலாகும். மற்றவை தறிநூலாம். இவ்வுண்மையை, நாயனார் குறளிலே "நவில்தொறும் நூல் நயம்போலும்" என்று நயம்படக் கூறும் ஆற்றலைக் கவனிக்க.

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்".

"மகன் தந்தைக் காற்றுமுதவி யிவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்."

என்ற இருகுறட் பாக்களிலும், தந்தை மகற்கும், மகன் தந்தைக்கும் செய்ய வேண்டிய ஒரு கடமை இதுதானெனக் குறளைப்போன்று வரையறுத்துக் கூறும் நூல் எப்பாஷையிலும் கிடையாதென்றே துணிந்து சொல்லலாம்.

ஆசிரியர் தம் நூலில் அதிகாரங்களை வகுத்திருக்கும் கூர்த்தமதி நலத்தைக் கண்டு இன்புறாதார் யாவர்? உதாரணமாக, செய்நன்றி யறிதலின் பின் நடுவு நிலைமையை வைத்ததின் பொருத்தத்தைப் பார்ப்போம். ஒருவன் செய்த நன்றியை மறத்தலினுங் கேடு தருவது ஒன்றுமில்லை என்ற நாயனாரின் கட்டளையை மேற்கொண்ட ஒருவன், தனக்கு உபகாரம் செய்தான் பிழை செய்த காலத்து, நடுவு இகந்து, அவன் செய்த நன்றி காரணமாக அவனிடம் பரிவு காட்டுவது அறநெறிக்கு மாறாகும் என்பதை வற்புறுத்தவே, செய்நன்றியின் பின் நடுவு நிலையை வைத்தார் என்பது புலப்படும். இவ்வாறே, அத்தியாயங்களின் வைப்பு முறையை ஆராய்ந்து பார்ப்பின் புலவரின் ஆற்றல் தோற்றும். தம் நூற்பொருளை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் எனப் பகுத்துக்கொண்டு முதலில் அறத்துப் பாலில் அறம் இன்னதென்பதை,

"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்"

என்ற குறளில் திறம்படக்கூறி அறத்தைக் கைப்பிடித் தொழுகுதலான் வரும் பயனைக் காட்சிவகை உபமானத்தால்,

"அறத்தாறு இதுவென வேண்டா, சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

என்ற குறளில் விளக்கியிருக்கும் புலமையை நாம் எவ்வாறு வியப்போம்?

நாயனார் அறத்தை இல்லறம், துறவறம் என இருபகுதிகளாகப் பிரித்துக்கொண்டு, இவ்விரண்டு ஒழுக்கங்களி னியல்பை,

"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப் பதில்லாயின் நன்று"

என்னும் ஒரே குறளில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கின்றார்.

பின்னர்ப் பொருட்பாலில், பொருட்பெருக்கத்திற்கு அரசனின் நன்

னீதியே ஆதாரமென்றும், நன்னீதி கல்வியில்லாத வழியில்லென்றும், கல்லாமையைப்பற்றி,

"நல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண் காமுற்றற்று"

என்று இன்பம் ததும்பச் சொல்லும் ஆசிரியரின் தெய்வப் புலமைதான் என்னே ?

பொருள்தனைத் தேடும் முயற்சியில் மனிதனுக்குப் பல இடையூறுகள் வரக்கூடுமென்றும், அவைகளைக் கண்டு மனம் சாம்புதல் கூடாதென்றும், அவைகளை வெற்றிகொள்ளும் உபாயம் இதுதான் என்றும்,

"இடுக்கண் வருங்கால் நகுக ; அதனை
அடுத்தூர்வது அஃதொப் பதில்"

என்ற குறளில் ஆணி அறைந்தாற்போன்று வள்ளுவனார் உறுதி கூறியிருக்கின்றார். அத்துடனமையாது, நமக்கு வருங் கேட்டினால் நன்மை பெரிதும் உண்டென்று வெகு நயமாக,

"கேட்டினும் உண்டோ ருறுதி ; கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்"

என்ற செய்யுளிற் கூறுகிறார். யந்திர யுகமாகிய இக்காலத்தில் உஷ்ணத்தை அளப்பதற்கு உஷ்ணமானியும் (Thermometre) வாயுவை அளப்பதற்கு வாயு மானியும்; (Barometre) பாலை அளப்பதற்குத் திரவமானியும் (Lactometre) கண்டு பிடித்திருக்கிறார்கள்.

நம் நாயனார் உண்மை நட்பினரை அளந்தறிவதற்கு "கேடு" என்னும் அளவு கோலைக் கொடுத்திருக்கின்றார். இதிலிருந்து ஆசிரியர் எவ்வளவு தூரம் உளநூலைப் பயின்றிருக்கின்றார் என்பது புலனும்.

ஒத்த உருவம், திருவம், குணமும் குலமும் உடைய ஒருவனும் ஒருத்தியும் வினைப்பயனால் தம்முள் ஒன்றுகூடி, இல்லறவாழ்க்கையை நடத்துவதற்கு அவர்களுள் இருக்கவேண்டியது அன்பு. கணவன் மனைவியர் மாட்டுக் காணப்படும் அன்பு காதல் எனப்படும். இது மிருக உணர்ச்சிபற்றி யெழுமாயின் வெறுக்கத் தக்கதாம். நல்லுணர்ச்சிபற்றி யெழுமாயின் போற்றத் தக்கதாம். பின்னையதையே நம் புலவர் இங்கு எடுத்து விதந்தோதுகிறார். ஆங்கிலத்தும் இதைத் தெய்வத்தன்மை வாய்ந்த அன்பு என்கிறார்கள். (Love is divine) இத்தகைய அன்பை உணர்ந்து பின்பற்றுகின்றவர்கள் மிகச் சிலரே என்பதை,

"மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்"

என்ற குறளில் குறிப்பிடுகிறார்.

காதல் என்பது ஒருவித நோய் என்றும், அது உண்டாகி, வளர்ந்து, முதிரும் பருவங்கள் இவையென்றும்,

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்"

என்ற குறட்பாவி லடக்கியிருக்கும் நயம் கருதற்பாலது.

உலகில், நோயை உண்டாக்கும் பொருள் ஒன்றாயும், அதைப் போக்கும்

# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.


## 4. தெய்விகத்தன்மை—விசேடணங்கள்

மணிமேகலையில், ஆசிரியர் சாத்தனுர், இக்காலத்தில் நன்கு விளங்காத சில தெய்வங்களின் பெயர்களையும், எளிதில் எவராலும் செய்ய முடியாத பல தெய்விகச் செயல்களையும், நிறைக் கூறியுள்ளனர். சாமானியமாக மனிதர்களிடத்தில் இயற்கையிலேய பொருந்தியுள்ள குணங்களோடு, எளிதி லெவரும் கொண்டிராத பல குணங்களும், தோற்றமும், செயல்களும் அவர்களிடம் இருந்தனவாக இங்கு கூறப்பட்டுள்ளன. மேற்போக்காக நோக்குமிடத்து, எவருக்கும் இவை யாவம் கவியின் கற்பனையால் உதித்தவையென்று தோன்றுமேயன்றி, உண்மையாக நிகழ்ந்தவையே யென்பது சடிதியில் விளங்காது. மானிடரது செய்திகளில் தெய்வங்களும் உடனிருந்து உதவி செய்த விவரங்கள் பழங்கதைகளைப் படித்த யாவரும் உணர்ந்ததே. மணிமேகலையிற் காணப்படும் தெய்விகத்தன்மை பொருந்திய செயல்கள் சிலவற்றைக் கீழே குறித்திடுவோம்.

### (மணிமேகலா தெய்வம்)

மணிமேகலா தெய்வத்தைக் குறிக்கும் செய்திகள் யாவும் வெகு விநோதமாக உள்ளன. இத் தெய்வம், இந்திரனது ஏவலால், அரக்கரின் வாதையி னின்றும் சில தீவிலுள்ள மக்களைக் காத்து வந்தது சாமானியமாக எல்லோராலும் செய்தற்கியலாதனவற்றை எளிதில் செய்திடு மாற்றல் பெற்றது. அந்தரத்தே செல்லுதலும், பிறரறியாது உலவுதலுமாகிய இத் திறத்தனவாகிய பல செயல்களைக் கொண்டிருந்தது. இது, கோவலனது குலதெய்வம். கடலினின்றும் அவன் குலத்து முன்னோ னொருவனைக் காத்தது. (21) அது பற்றியே, மாதவிக்குப் பிறந்த மகளுக்கு இத் தெய்வத்தின் பெயரிடப்பட்டது. (7: 32: 35) தனது தெய்விகத்தன்மை விளங்க அதுவே

---

மருந்து வேறாயுமிருக்கக் காதலாகிய நோயை உண்டாக்கும் பொருளும், அந் நோயைப் போக்கும் மருந்தாகிய பொருளும் ஒன்றேயென்று,

> "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
> தன்னோய்க்குத் தானே மருந்து"

இக்குறட்பாவில் வெளியிட்டிருக்கும் உண்மை பயிலுந்தோறும் விஞ்சிய மகிழ் வூட்டுகின்றது.

"விஞ்சையிற் பெயர்ந்து நின் விளங்கிழை தன்னை" (7: 21) எனப் பாராட்டிக் கூறியுமுள்ளது.

மணிமேகலைக்குப் பல விடங்களிலும் இத் தெய்வம் வேண்டிய நல்லுதவி புரிந்துங்கல் நோக்குக. புத்த தேவனது பெருமை விளங்க, இத் தெய்வம் பலவிடத்தும் அத் தேவனைப் புகழ்ந்து துதி செய்துள்ளது. (5; 98. 105) இந்திரவிழாவைக் காணவந்த இது, மாறுவேடம் பூண்டு, உவவனம் வந்து சக்கரவாளக் கோட்டத்தின் வரலாறு கூறிய பின்னர் மணிமேகலையை எடுத்து ஆகாய வழியே சென்று, மணிபல்லவத் தீவிலிட்டது. (காதை. 6) உவவனத்தில் மணிமேகலை பிரிந்து சென்றதும் அறியாது தூங்குகின்ற தோழி சுதமதியை யெழுப்பித் தனது உயர்வைக்கூறி, மணிமேகலைக்கு இனி வர உள்ள நிகழ்ச்சிகளையும் மொழிந்து சென்றது. (கா. 7) பின்னர், ஆகாயத்தினின்று மிறங்கி, மணிபல்லவ தீவத்தில், பீடிகையை வலம் வந்து வாழ்த்தித் தொழுது பின்னர், மணிமேகலைக்கு இராகுலன், வீரை, தாரை யாகிய மூவரின் சரிதமும் முறையே கூறி, மந்திரம் மூன்றும் உபதேசித்துச் செல்லுகின்றது. (10.)

## (தெய்வ கணங்கள்)

தூண்களிலிருந்த தெய்வங்கள் பேசுந் தன்மையனவாகக் கூறப்பட்டுள்ளன. இவை 'நாவுடைபாவை' யெனப்படல் காண்க. (22: 94) மற்றும், முக்கால நிகழ்ச்சிகளு முணர்ந்தன. (19: 10-4). துயிலெழுந்து இரவில் உலகவறவி சென்ற சுதமதிக்கு, நெடிய தூணொன்றில் எழுதப்பட்டிருந்த அற்புதப் பாவை யொன்று அவள் கண்டு மயங்கி அஞ்சவும், அவளது பிறப்பு வரலாற்றைக் கூறுவதாயிற்று. (7: 94: 7) அங்கி யொன்றும் செய்யாதது கண்டு வருந்திய ஆதிரைக்கு ஆகாயவாணி தேறுதல் கூறியது. (16) காய சண்டிகை வடிவோடு வெளிவந்த மணிமேகலையைக்கண்டு கலங்கிய உதயகுமரன், சம்பாபதி கோயிலுட்சென்று "என் குறை தீர்ப்பாய். உன்னடி தொட்டேன்" என்று வஞ்சினங் கூற, ஆங்கிருந்த சித்திரங்கள் ஒன்றிலிருந்த தெய்வம், ஆராயாது சபதங் கூறியது பயனற்றதெனப் பேசியது காண்க. (19) துர்க்கை, காந்தனைப் பரசுராமன் வருதலால் போரியற்றாது வெளிப்போகுமாறு கூறியது நோக்குக (22) பத்தினிக் கடவுள் கண்ணகியிடம், மணிமேகலை, மதுரையை யெரித்த வரலாறும், கண்ணகியின் எதிர்கால வரலாறும் உணர்ந்திருந்தனள். (26) மதுராபதி, கண்ணகியிடத்துக் கோவலன் இறந்ததற்குக் காரணம் கூறுதலும் கவனிக்க. (26.)

## (கந்திற்பாவை தெய்வம்)

இந்நூல் முழுவதிலும் கந்திற்பாவை தெய்வத்தைப்பற்றிய செய்தியே பல விடத்திலும் காணப்படுகின்றன. இத் தெய்வம், சக்கரவாளக் கோட்டத்தில், சம்பாபதி கோயிலின் கிழக்கேயுள்ள தூணொன்றில், தேவதச்சன் மயனால் நிருமிக்கப்பட்டது. (21: 132-3). துவதிக னென்னும் தேவனது வடிவாக அமைந்தது. (21) அத்தூணினின்றும் நீங்காது முக்கால நிகழ்ச்சிகளையும் கூறும் சக்தி வாய்ந்தது. வழுவறு மரனிலும் மண்ணிலும் கல்லிலும் தன்போ லெழுதப்பட்ட பாவைகள் பேசு மாற்றலைக் கொண்டதென்றும், தம் போன்ற தெய்வங்கள் உள்ள இடத்தை,

"மூடித்த வருசிறப்பின் மூதூர் யாங்கணுங்
கொடித்தேர் வீதியுந் தேவர் கோட்டமு
மூதுமா விடங்களு மூதுநீர்த் துறைகளும்
பொதியிலும் மன்றமும் பொருந்துபு நாடிக்
காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி
யாப்புடைத்தாக வறிந்தோர் வலித்து
.......................வகுக்க அது நீங்கா."

(21-124 9) என்றும் சுந்திறப்பாவையே மொழிந்திடும் இவ்வடிகளோடு திரு முருகாற்றுப்படை, 218-26 அடிகளை ஒப்பு நோக்குக) சாவக நாட்டில் ஆபுத்திரன் பிறந்த காலை நிகழ்ந்த நன்னிமித்தங்களைக்கண்டு, சக்கரவாளக் கோட்டத்து முனிவர்கள் கந்திற்பாவையை 'உற்றது யாதென' வினவ, அத் தெய்வம் நிகழ்ந்தது கூறிற்று. (15) காஞ்சனன், உதய குமரனை வெட்டிக் கீழ் வீழ்த்தியதும், காயசண்டிகை உருக்கொண்டிருந்த மணிமேகலையை எடுத்துச் செல்ல அவளருகில் வரக் கந்திற்பாவை, அவனை விலக இருக்கச் செய்து, விந்தா கடிகையின் வயிற்றிற்சென்ற காயசண்டிகைக்குற்ற கேட்டை யும், அவளது வினைப்பயனையும் உணர்த்துவ தாயிற்று. (20).

மணிமேகலைக்கு இனி அவளுக்கு வரவுள்ளனவற்றைக் கூறி,

"நினக்கிவன் மகனுத் தோன்றியதூஉ
மனக்கினியாற்கு நீ மகளாயதூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற்
கண்ட பிறவியே யல்ல காரிகை." (21-29-32).

என மணிமேகலையும் உதயகுமரனும் மனைவியும் கணவனுமாக இருந்தது, கழிந்த பல பிறவிகளிலும் நிகழ்ந்ததெனத் தனது நிகழ்ந்தகால அறிவால் கூற லுற்றது. (21) பழிமாற்ற வேண்டிய விசாகைக்காக நகரினர் முன் னிலையில் அவளது தூய்மையை விளங்கச் செய்தது. (22) நாடுற்ற வறு மைக்கு வருந்திய காஞ்சி அரசன் முன்பு, கந்திற்பாவை தெய்வமொன்று தோன்றி, மணிமேகலை வருதலையும், அவளிடத்துள்ள நற்பாத்திரத்தால் அவனது நாட்டின் பசிப்பிணி யகன்றிடுமென்றும் கூறிப் போந்தது. (28) சமந்தகூட மலையைத் தரிசித்து வந்தபின், இந்திரனது கட்டளைப்படி தீவ திலகை யென்னும் தெய்வமாது மணிபல்லவத்துள்ள புத்த பீடிகையைப் பல்லாண்டுகளாகக் காத்து வருவாளாயினள். அக்ஷய பாத்திரத்தின் முழு வரலாற்றையும் மணிமேகலை அறவணர்பால் அறிந்திடுவளென முன்னதாகக் கூறியவளும் (11. கா) ஆபுத்திரனது கழிந்த பிறவியை அவனறியச் செப்பிய வளுமாகிய (15. கா), இத் தெய்வம் முக்கால நிகழ்ச்சியு முணர்ந்தவள். விந்தாகடிகை யென்னும் மற்றொரு தெய்வமாது துர்க்கை கோயிலுக்கு நேர் மேலே சொல்லுவோர்களைச் சாயையினால் இழுத்துத் தனது வயிற்றில் அடக் கிக்கொள்ளும் அதிவிந்தையான செயலுடையவள், (20.)

(பூதங்கள்)

பாவிகளைப் புடைத்துண்ணும் சதுக்கப் பூதமொன்று காவிரிப்பூம் பட் டினத்தி லுண்டு. (காதை. 1.) அது தீயவர்களைத் தன் பாசம் கட்டி வர

அறைந்துண்ணு மியல்பினது. அரசனால் ஏழு தினங்களில் தண்டியாது விடப்பட்ட கொடியோர்களைத் தான் தண்டித்திடும். இச் சதுக்கப் பூதம் மருதி முன்னர்த் தோன்றிக் கற்புடைய மாதரிலக்கணங் கூறுதல் காண்க. (22) சதுக்கப் பூதத்தின் வரலாறு சிலப்பதிகாரத்திலும் கூறப்படுதல் நோக்குக.

## (வித்தியாதரர்)

இந்துக்களின், பரம்பரைக் கொள்கைப்படி, வித்தியாதரர்களைப்பற்றியும், அவர்கள் கொண்டுள்ளதாகப் புராணங்கள் கூறும் தெய்விகச் செயல்களைப்பற்றியும் உள்ளபடி இந்நூலில் பல விடங்களிலும் கூறப்பட்டுள்ளன. கந்தர்வர், யக்ஷர், கின்னரர் முதலிய பதினெட்டு வகையான தேவகணங்களில் வித்தியாதரரு மொருவர். இவர்கள், மாவிகாஞ்சனம் முதலிய மாய வித்தையை யுடையவர்கள். பேரழகு வாய்க்கப் பெற்றவர்கள். மலை இடுக்குகளில் வாழ்ந்து வருவோர். இதனைக் கம்பர், "கமருறு பொருப்பின் வாழும் விஞ்சையர்" என்றும் (பால. வரை. 28) 'மஞ்சளாவிய மாணிக்கப் பாறையில், கொழுநரோடேச் சென்ற விஞ்சைமாதின் பஞ்சளாவிய சீறடி வடுக்க ளுள்ளதைக் காணாய்' (அயோ. சித்தி. 20), இராமபிரான் சீதாபிராட்டியாருக்குச் சித்திர கூடத்தின் காட்சிகள் பலவும் காட்டி வந்த இடத்தில் கூறியதாக உள்ளதும் நோக்குக. இவ்வாறாக நூற்களில் பல விடங்களிலும் வருவன அங்கங்கே கண்டு கொள்க.

வித்தியாதரர்களில், ஆடவரும் பெண்டிருமாகிய இருபாற் பட்டவரும் ஆகாய வழியே பறந்து செல்லுமாற்றலைப் பெற்றிருந்தனர். ஆசிரியர் இவர்களை "ஆகாய சாரிகள்" எனக் கூறியுள்ளது காண்க. (கா. 20) இந்திர விழாவைக் காண வந்த, மாருதவேகன் ஆராயாது தனிவழியேகிய சுதமதியையெடுத்து ஆகாயவழியே சென்றனன். (3: 5.) சாத்தனார் இவ் வித்தியாதரனுடைய செயலைக் கூறுமிடத்து,

> "தாரன் மாலையன் றமனியப் பூணினன்
> பாரோர் காணாப் பலர் தொழும் படிமைய
> னெடுத்தன னெற்கொண் டெழுந்தனன் விசும்பில்"

(3: 36-8) என மொழிதல் காண்க. காஞ்சனன் ஆகாயவழியே சஞ்சரிப்பவன் (20) அவன் மனைவி கடும்பசி யொழித்துக் காயசண்டிகை விசும்பு வழியாகச் செல்லுகையில், விந்திய மலையின் மேலே சென்றதால் விந்தா கடிகையின் வயிற்றகம் சென்றனள் (20).

## (முனிவர்கள்)

மனமொழி மெய்களால் பரிசுத்தராக இருந்து, புத்த மதப் பற்றுகளைக் கொண்டொழுகும் புத்த முனிவர்கள் ஏனையோரால் செய்தற்கியலாத செயல்கள் பலவற்றையும் செய்து வந்தனர். தமது தவபலத்தாலும், சித்த சுத்தியாலும் தவசிகள் பலர், இங்ஙனமாக இருந்துவந்தது இந்நாட்டில் விந்தையன்று. பிரமதருமன், பூமி நடுக்குற்று ஏற்பட்ட பூகம்பத்தால் ஏழுதினங்களில் அத்திபதியின் நாடு அழிந்து வியன் பாதலத்தில் வீழ்ந்து கேடெய்திச் செல்லுமென்றும், தினங்கள் பதினொன்றில் திட்டிவிடமென்னும் அரவு கடித்துத்

தகை குணன் இராகுல னிறந்திட, இலக்குமி அவனுடனே தீப்புகுவளென்றும் கூறியபடியே, இரண்டும் நிகழ்ந்திடுதல் காண்க. (9. கா.) பொதியமலைச் சாரலில் தவஞ் செய்திருந்த முனிவிருச்சிகன் பன்னிரு ஆண்டுகளுக்கொரு முறை யுண்ணும் நோன்பினன். பன்னிரு வருடங்களுக் கொருமுறை பழுத்திடுவதும், பனங்கனி போன்ற பருமனுடையதும், தன்னை யுண்டோரது பசியைப் பன்னிரு வருடங்களுஞ் அடக்குவதுமாகிய, நாவன்மரத்தின் திங்கனியே அம்முனிவன் அருந்துவது. அவனிட்ட சாபம் உடனே காயசண்டிக்குப் பலித்திட்டது. (17) முக்கால ஞானமுமறிந்த மண்முகமுனி, ஆபுத்திரன் பசுவயிற்றில் பிறத்தலை முன்னதாகக் கூறியது காண்க. 15) சாது சக்கரனென்ற முனி ஆகாயவழியே செல்லுபவன். (10) இம்முனிக்குத் தனது முற்பிறப்பில் அமுதளித்த புண்ணியமே அடுத்த பிறவியில் மணிமேகலையை மேம்பாடுறச் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. (21) புத்த சாரணன் கொண்டுள்ள அருஞ் செயலைக் கூறுமிடத்து ஆசிரியர்,

> "நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
> சலத்திற் றிரியுமோர் சாரணன்" (24: 46-7)

என்று கூறினர். "என்னுயிர் போன்ற ளெங்கொளித்தன' ளென அலைந்து திரிந்த அரசன் முன்வந்த சாரணர்" இப்பொழுது கண்டிலே னெயினும் முன்பு கண்டதுண்டு" என்று பீலிவளையின் பிறப்பு வரலாற்றையும், சோதிடர் மொழியும் இந்திர சாபமும் கூறிப் போயினர். (24)

## (அறவண வடிகள்)

அறவண வடிகள் புத்த தருமங்களை நன்கு உணர்ந்த புத்தமுனிவர். மணிமேகலைக்குச் செய்தவாறு புத்த தருமங்களை விரித்துக்கூறி பலருக்கும் உபதேசம் செய்து நல்ல வழியுட் படுத்தியவர். பல ஆண்டுகளாக இருந்தவர். முக்கால உணர்ச்சி யுடையதொரு மூதறிவாளர். மணிமேகலா தெய்வம், தீவதிலகை, (12) கந்திற் பாவை, (15-21) முதலிய தெய்வங்களின் நன்மதிப்பைப் பெற்றவர். துச்சய ராசனது மனைவியரா யிருந்த தாரை, வீரை யென்பாரைப் புண்ணிய மலையாகிய பாதபங்கயத்தைக் கண்டுவருமாறு செய்தவர். அவ்விருவரும் ஒருங்குடன் மாண்ட விதத்தையும் (12) ஆபுத்திரனது கழிந்த பிறவியின் சரிதையையும் (13) மணிமேகலைக்குக் கூறியவர். புத்தன் பிறக்கும் தினத்தையும், அவன் பிறக்குங்காலை நிகழும் நன்னிமித்தங்களையும் உணர்ந்து கூறியவர். மாதவியின் கணவனிறந்த துன்பந் துடைத்து மேன்மையுறத் துறவுக்கோலங் கொள்ளுமாறு செய்தவர் (3.) பலகாலமாக இருந்து, குறைவுபட்டுவரும் புத்த தருமத்தைத் தழைத்தோங்கச் செய்யும் நோக்கத்தோடும், தரும உபதேசம் செய்துவந்தார். கடலுண்ட பட்டினத்தை நீத்து மாதவியோடும், சுதமதியோடும் வஞ்சியேகிய இவர், ஆங்கு பவத்திற மறுக்கப் பாவை மணிமேகலைக்குப் பௌத்த தருமங்களை உபதேசித்தார். ஆண்டு பலவாகிய மிக்க வயோதிகரா யிருந்தும் நாத்தொலை வில்லாதிருந்த இவரைப் "பழுதறு மாதவன்", "துணி பொருள் மாதவன்", "நன்றறி மாதவன்", என்றிவ்வாறாக அங்கங்கே சிறப்பாகக் கூறப்பட்டிருப்பதால் இவரது தூய்மையும்; மதாபிமானமும், அறிவும் விளங்கிடும். அக்காலத்திலிருந்த தபோதனர்களில் இப்பெயரோடு இருந்தவரென்பது எளிதில் அறிய முடியாதுள்ளது.

(மணிமேகலை)

நாடகக் கணிகையரின் இனத்தவளாயினும், மணிமேகலை அக்குலத்தவர்களின் தீய ஒழுக்கங்கள் சற்றும் தன்னைப் பாதியா தொழியும்படி, இளவயது தொட்டே நல்வழியைய நாடிநின்று, மேன்மையுறக் கருதி, அங்ஙனமே இறுதியில் நற்பதவியு மடைந்தனள். அவளது நல்வினைப் பயனும், நற்குணமும் நற்செய்கையுமே அவளை மனிதர்களாலன்றி தெய்வங்களாலும் நேசிக்கும்படி செய்தது. தெய்வமிட்டுச் செல்லத் தனது பழம் பிறப்பை யுணர்ந்தனள். மணிமேகலா தெய்வத்தின் மந்திர உபதேசத்தால், மணிமேகலையும் பசியொழித்தல், வேற்றுருக் கொள்ளுதல், அந்தரத்தே செல்லுதல், எப்பிணியும் தன்னை வருத்தாதொழியச் செய்தலாகிய (10) இத்திறத்திய அருஞ் செயல்களைக் கொண்டிருந்தனள். வேண்டிய சமயத்து அம்மந்திரங்கள் அவளுக்கு உதவியாக உடனிருந்து பயன்பட்டும் வந்தன. மணி பல்லவத்தி லிருந்து காவிரிப்பூம் பட்டினத்திற்கும் (11); ஆங்கிருந்து ஆபுத்திர நாட்டிற்கும் மீட்டும் மணி பல்லவத்திற்கும் (24); வஞ்சிக்கும் (25), காஞ்சிக்கும் (28) மணிமேகலை ஆகாயவழியே பறந்து சென்றனள். காவிரிப்பூம் பட்டினத்தில் உதயகுமாரனுக்குப் பயந்து அம்பலத்தும் (17); அரசியின் வஞ்சனைச் செயலினின்றும் தன்னை மீட்டுக்கொண்ட சமயத்தும் (24), சமயக் கணக்கரின் திறனைக் கேட்ட வமயத்தும் (26); வேற்றுவடிவங் கொண்டிருந்தனள். ஊணொழித்துப் பல காலமு மிருந்தனள். (23).

(அற்புத ஆவும் அதன் புத்திரனும்)

சாலி எறிந்து சென்ற ஆ புத்திரனை பூதியெடுத்து வளர்ப்பதற்கு முன்னதாகத் தனித்திருந்த அவனை, எழு தினங்கள் பசுவொன்று பாலூட்டி வளர்த்து வந்தது. அந்நற்பயனின் விசேடத்தால் அப்பசு, சாவக நாட்டில், மண்முக முனி தவஞ் செய்துவந்த தவள மலையில், பொன்னிறக் கொம்பும், பொற்குளம்பு முடையதாகச் சென்று உயிர்களுக் கெல்லாம் தனது பாலைச் சுரந்து ஊட்டுவித்து வந்தது. அப்பசு வயிற்றில், நன்னிமித்தம் பலநிகழ்ந்த சுபதினத்தில் அக்ஷய பாத்திரத்தைக் கோமுகியி லிட்டுப் பட்டினி யிருந்து உயிர் நீத்த ஆ புத்திரன், (தன்னை இளமையில் காத்த பசுவை மறவாத உள்ளத்தினனாக இருந்தமையின்) பிறந்தனன். இங்ஙனமே, பசு வயிற்றில் அசலனும், நரி வயிற்றில் கேசகம்பளனும், மான் வயிற்றில் சிருங்கியும், புலி வயிற்றில் விரிஞ்சியென்ற முனிவனும் பிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது காண்க. ஈகையின் சிறப்பால் ஆ புத்திரன் தெய்வீக சக்தியைப் பெற்றிருந்தான். அது பற்றிச் சிந்தாதேவி அமுதசுரபியை அவனுக்குக் கொடுத்தது.

சாமானியமான மனிதர்களாகிய மணிமேகலையிடமும், ஆபுத்திரனிடமும், எளிதி லெவரிடமும் காண முடியாத பெரும் சக்திகள் இருந்தனவெனக் கூறுவது பொருந்துமா வென்ற சந்தேகம் பிறந்திடலாம். தத்துவ நூற்கள் ஐம்புலனை யொடுக்கி, நல்லறிவைக் கொண்டு, வழுவின்றித் தரும முறைப்படி நடந்து பரிபக்குவமடைந்த எவருக்கும், அசாத்தியமான காரியங்களாக இவ்வுலகி லெதுவும் இருந்திடாதெனக் கூறுகின்றன. மாபெருங் குணங்களைக் கொண்ட அத்தகையோருக்கு எப்பொருளும் எளிதில் கைகூடும். ஆதலின், முதிய அறிவு நிறையக் கொண்டிருந்த மணிமேகலையிடம்

இத்தகைய பெறுதற்கரிய பெருங்குணங்க ளிருந்தனவாகக் கூறப்பட்டிருப்பது, அவன் போன்ற மதவைராக்கியங் கொண்டிருப்போரனைவரு மெளிதாக அடையக் கூடியவைகளே. பரத்தையின் பெண்ணாயிருந்தும், மணிமேகலை, தனது மன வலிமையாலும், ஊக்கத்தாலும், பேரின்ப மார்க்கங்களையே நாடியவளாய் நின்று, மேலான பதவியை யெய்தினள். மணிமேகலையைப் போல ஆபுத்திரனிடமும், அவனது நல்வினைப்பயனின் காரணமாக, இன்னவாறான நற்குணங்களும், பெருஞ் செயல்களும், அதிகமாகவே இருந்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின் இவ்விருவரும் கொண்டிருந்த விசித்திர குணங்கள் புத்த மதப்பற்றைக்கொண்டு அறவழியை நாடி நிற்போ ரெவரிடத்தும் உளவாகக் கூடியவையென அக்காலத்தினர் நம்பியிருத்தல் வேண்டுமென்பது, ஆசிரியர் அதற்கு மாறாக எவ்விடத்தும் தமது நூலில் எழுதா திருத்தலால் தெரியவரும். நூல் முழுவதும் ஆசிரியர் சாமானிய மனிதருக்கும், தெய்வீகச் செயல்கள் பொருந்தியவர்களுக்கு முள்ள பேதங்கள் வெளிப்படையாகத் தோன்றும்படியாகவே எழுதிப் போந்துள்ளது காண்க.

## (சக்கரவாளக் கோட்டம்)

சார்ங்கலன் என்னும் தன் மைந்த னிறந்திட மனம்நொந்து வருந்திய பார்ப்பினி கோதமையினது துயரைக் களைந்திடும் நோக்கமொடு, மீண்ட உயிரைக் கொடுத்திடும் சக்திவாய்ந்த தெய்வங்க ளெங்குமில்லை யென்பதைக் காட்டச் சம்பாபதி தெய்வம் உலகிலுள்ள எல்லா தெய்வங்களையும் அழைத்துக் காட்டியது. தெய்வங்க ளொருங்கு கூடியிருந்த அப் புனித இடத்தின், அந் நற்காட்சி யென்றும் மறந்திடாது பின்பு எக்காலத்திலும் யாவருங் கண்டு களித்திடுமாறு அத்தெய்வ உருவங்களைப் பொருத்தி மயனால் கட்டப்பட்டது சக்கரவாளக் கோட்டமென்பது (6). அது பூம்புகாரில் இருந்தது. அருந்தவ முனிவர்கள் அனேகரைக் கொண்டது. (22).

## (அமுத சுரபி)

தீராத பசியைத் தீர்த்து வற்றா உணவை வாரி அள்ளக் குறையாது அளிக்கும் புகழைக்கொண்ட அக்ஷய பாத்திரமும் தெய்வீகத்தன்மை கொண்டுள்ளதாகவே யுள்ளது. அது தன்னுள்ளிட்ட அன்னத்தை அதிகரிக்கு மியல்பினது. தென்மதுரையில் கலா நிலயத்திலிருந்த சிந்தாதேவி அப்பாத்திரத்தை ஆபுத்திரனுக்குக்கொடுத்தது. அப்பாத்திர மகிமையை அத்தெய்வமே,

> "நாடுவறங் கூறினு மிவ்வோடுவறங் கூறாது
>
> வாங்கு நர்கையகம் வருத்த லல்லது,
>
> தான்றொலை வில்லாத்தகை மையது." (14: 13: 5)

எனக் கூறிப் புகழலுற்றது. பரிசுத்தமான கோமுகிப் பொய்கையில் ஆண்டு தோறும் புத்தன் அவதரித்த தினமாகிய வைகாச சுத்த பூர்ணமை தினத்தன்று வெளிப்பட்டு வந்தது. (11). மணிமேகலையின் கைப்பட்டபின் காயசண்டிகையின் தீராப் பசியைத் தீர்த்ததோடு, அப்பாத்திரம் பசித்து வந்தோ ரெவருக்கும் உணவளித்துப் பசி யொழித்து உண்பித்தது. உயிர் மருந்தாகிய இப்பாத்திரத்தை மணிமேகலையும் அரசன் முன்னர் புகழ்ந்து கூறுதல் காண்க. (19). இப்பாத்திரங் கொண்டு உலக வறவியில் வந்தோரு

க்கு உணவிட்டனள். (17). சிறைச்சாலையி லுள்ளவரும் அதிலுள்ள அன்னத்தை உண்டு மகிழ்ந்தனர். (19). ஒரே காலத்தில் இப்பாத்திரத்தைக் கொண்டு கச்சியில் மணி மேகலை,

"மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
கோணர் கேளார் கான்முட மானோர்
பேணு மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூறு யிரம் விலங்கின் றொகுதியு
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி."ய (28-221-7)

எல்லா உயிர்களுக்கும் உண்டியளித்து உகந்தேகுமாறு செய்தனள்.

## (வனங்கள்)

காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள வனங்களைக் கூறுமிடத்து ஆசிரியர் உய்யா வனத்தில், வானவர்களா லின்றி மண்ணவர்களால் விரும்பப் படாதனவும், பாடும் வண்டுகளால் அணுகப்படாதனவுமாகிய மலர்களைக் கொண்ட பல மரங்கள் வாடாத மலர்களைக் கொண்டுள்ளதால் "இவ்வனம், பூதம் காத்திட்ட" தென நினைத்து உணர்ந்தோர் அதனை யடைந்து செல்லார்; கதிரவனின் வெம்மையால் விரிசிறை யிழந்த சப்பாபதியிருந்த சம்பாபதி வனமும், காவிரிப் பாவையின் தாதை கவேரனிருந்த தவவனமும், மூதுமையுடையனவும் தாக்கி வருத்துந் தன்மைபதுமாகிய பொல்லாத் தெய்வங்களாற் காக்கப்படுதலின் அறிந்தோர் அவைகளையும் எய்தாரெனப் புதுமையையுடைய வனங்களி னியல்பு கூறுவதுங் காண்க.

## (பளிக்கறை)

தன்னகத் துள்ளோரது ஓசையைப் புறத்துள்ளோர் அறியா வண்ணம் செய்து, அவர்களின் மெய்யை மட்டும் வெளிப்படுத்துவதாகிய பளிக்கறை மண்டபமொன்று, பகவனது ஆணையால் பல மாமும் பூத்திடும் உவவனத்தி லுள்ளது. அம்மண்டபத்தே "துகிற மாமணிச் சுடரொளி விரிந்த தாமரைப் பீடிகை யொன்றுண்டு. அப்பாத பீடத்திலிட்ட அரும்புகள் மலரும். தொல்லாண்டு கழியினும் அதிலிட்ட மலர்கள் வாடா. அம்மலர்களை வண்டுகள் மொய்த்திடாது. தன்னகத்திட்ட மலர்களை நினைத்த கடவுளின் பொற்பாதங்களில் அடைவிக்கும். நினைப்பிலராய் மலரையிடின், அவை யெங்கும் சென்றிடாது. "செய்யும் வினைகள் சிரத்தையோடு கலவாவிடத்துப் பலியா" என்ற புருஷார்த்தத்தைக் காட்டுதற்கு மயனென்பானுல் அது கட்டப்பட்டது. (கா. 3.)

உதய குமானுக்குப் பயந்து மணிமேகலை பளிக்கறையில் புகுந்திட, அரச குமானுக்கு அவளது உருவமே தோன்றுவதாயிற்று. அவளை அடைய விரும்பிய இளங்கோனுக்கு வழி யொன்றும் தோன்றாது போக, அத்தா ழொளி மண்டபத்தைத் தன் கையாற் றடவி வாயிலை யெங்கும் காணுது அதனைச்

சூழ்ந்து கலங்கி வந்தனன். இப்பீடிகையோடன்றித் தேவர் கோனு விடப்பட்டதும், தன்னைத் தரிசித்த புத்தனது நல்லறத்தைக் கைப்பற்றி நடந்திடும் பரிசுத்தருக்குப் பழம் பிறப்பைத் தெளிவுபட உணர்த்துவிக்கும் சிறப்புற்றோங்கியதும் (11). ஒரு வழித்தோன்றிய மன்னரிருவர் "எமதிது" என்று வாது புரிந்து தம் பெருஞ்சேனையோடு வெஞ்சமர் புரிந்த நாளில் "செருவொழிமின். இது எமது" என்று பெருந்தவ முனிவன் புத்த தேவன் தான் அதிலமர்ந்து முறைசெய்ததுமாகிய புத்த பீடிகையொன்று மணிபல்லவத்தி லுண்டு. அது,

"விரிந்திலங் கவிரொளி சிறந்து கதிர் பரப்பி
யுரைபெறும் மும்முழ நிலமிசை யோங்கித்
திசைதொறு மொன்பான் முழநில மகன்று
விதி மாணுடியின் வட்டங் குயின்று
பதும சதுர மீமிசை விளங்கி
யறவோற் கமைந்த வாசன"மாகும். (8: 44: 9)

அங்கு, நறுமல ரல்லது பிறமாஞ் சொரியாது. அதனருகில் பறவையு முதிர் சிறை சென்றதிராது. தனது பழம்பிறப்பை அப்பீடிகையா லுணர்ந்து கொண்டு (9. கா.) மணிமேகலை ஆபுத்திரனையும் அறியச் செய்வா ளாயினள். (25). அவ்வுயர் மணிப்பீடிகை "சூலந்த பிறவியை, மையறு மண்டிலம் போல"க் காட்டு மியல்பினது. (25: 135: 7:)

எண்ணிலா அருந்தவத்தவர்கள் நிறைந்து இருந்து செயற்கரிய காரியங்களைச் செய்திட்ட பெருமை வாய்ந்த நம்மிந்திய நாட்டில், இந்துக்கள் இத்தகைய கருத்தைக் கொண்டு, இவ்வித விஷயங்களில் பூரண நம்பிக்கையும் கொண்டிருந்தன ரென்பது இதிகாச புராணங்களாலும், அனைத்துமுணர்ந்த அறிவாளிகளின் நூற்களாலும் நன்கு விளங்குகின்றன. புத்த நூற்களிலன்றிப் பிற நூற்களிலும் இத்தகைய செய்திகள் வந்துள்ளன காண்க. இக்காலத்தில், இத்திறப்பட்ட தெய்வீகச் செயல்களைச் சாமானியமாக நிகழ்ந்திடக் கண்டிலாத காரணத்தால், அக்காலத்தி லுள்ளனவென்று நூற்கள் கூறும் இவைபோன்ற மேன்மையான அற்புதச் செய்திகள், உண்மையாக இருந்திருக்குமா வென்று ஐயப்படுவதில் பயனொன்றுமில்லை. அக்காலத்திலிருந்தது இக்காலத்தி லில்லாமலும், இக்காலத்தி லுள்ளவை அக்காலத்தி லில்லாமலும், இருக்கலாம். இதுவே காலச் சக்கரத்தின் கூற்று. சாத்தனாரும் இவ்வாறான தெய்வீகச் செயல்கள் சாமானியமான மனிதரிடத்துப் பொருந்தி யிருந்தன வெனக் கூறுது; அவைகளைக் கொள்ள அருக ராவோ ரிடத்தும், கொண்டிருக்கக் கூடியவரிடத்துமே இருந்தனவாகப் புத்த மதத்தினரின் கொள்கைகளுக்கு முரணுகா வண்ணம் பொருந்தும் முறைப்படி கூறியுள்ளனர். தெய்வங்கள் தூணிலோ துரும்பிலோ எங்கிருப்பினும், அவை அதிசய சக்தி வாய்க்கப் பெற்றனவாக வென்றே நூற்கள் கூறும். அங்ஙன மிருத்தல் பற்றியே அவை தெய்வங்க ளெனவும் படும். ஆகலின், மணி மேகலையில் கூறப்பட்டுள்ள தெய்வீக சம்பவங்கள் யாவும் நிகழ்ந்தவை யென்றே துணிந்திட வேண்டியுள்ளது.

---

# பகவதாராதனம்

(திரு. கே. எஸ். சடகோபராமாநுஜ நாயுடு.)

கிடைத்தற்கரிய மானிடப் பிறவியை யடைந்துள்ள நாம், எவ்வளவு கோடிக் கணக்கான புண்ணியங்களைக் கொட்டிக் கொடுத்து, இந்த சரீரத்தை வாங்கியிருக்கிறோம் என்று இதன் அருமை பெருமைகளை உணர்வதில்லை. ஸ்தாவர யோனி முதலிய கீழுள்ள யோனிகளி லெல்லாம் பிறந்துபிறந் திளைத்து,புண்ணியமேலீட்டினாலே வருதல் மிகுந்தஅருமையாம். அவ்வருமை, ஆராயுங்காலத்து, கடலைக் கையினாலே நீந்திக் கரையேறுதல் போலாம். இத்தகைய பெறுதற்கரிய பிறவியை யடைந்த பிறகேனும், நம்முடைய வேலை இத்துடன் முடிந்தவிட்டதென்று கவலையில்லாமல் இருக்க முடிகிறதா? இல்லை. நம்முடைய ஐச்வர்யம், ஆயுசு, யௌவனம் இந்த மூன்றும் நிலையில்லாது ஒரு க்ஷணத்தில் போய்விடும் என்பதை சற்று நிதானித்து யோசித்துப் பார்த்தால், நாம் தைரியமாக உட்காரத்தான் முடியுமா? சூரியன் உதிக்கும்பொழுது பணம் சம்பாதிப்பதற்காக ஏற்பட்ட காலம் வந்து விட்டதென்றும் நினைத்து, ஜனங்கள சந்தோஷமடைகிறார்கள்.

"நாளென ஒன்றுபோற் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்"

என்று செந்நாப்போதார் கூறியபடி, உண்மையில் சூரியன் நாள் என்னும் வாளாயுதத்தால் தங்களுடைய ஆயுட்காலத்தை அறுத்துக்கொண்டு வருவதாக நினைத்து, 'ஐயோ, எம்பெருமான் தன்னையடையும் உபாயத்தைப் பின் பற்றுவதற்காகக் கொடுத்த ஆயுட்காலத்தில், ஒருநாள் வியர்த்தமாகப் போய் விட்டதே! அவருடைய திருவருளைப் பெறுதற்கான காரியம் நாம் ஒன்றும் செய்திலோமே" என்று இரங்குவாரில்லை.

மனித வாழ்க்கையானது "ஆற்றங்கரை வாழ் மரம்போல்" நிலையில்லா திருப்பதால், பெரியோர்கள் பிரசங்கங்கள் மூலமாகவும், உபதேசங்கள் மூலமாகவும், தற்காலத்திலுள்ள நல்ல சஞ்சிகைகள் சில கட்டுரைகள் மூலமாகவும், "மனிதனே! நீ தீப்பிடித்து எரியும் வீட்டிற்குள் இருக்கிறாய். சீக்கிரம் வெளியே வந்து நெருப்பை அணை" என்று சொன்னால், அவர்கள் "அதற்கென்ன, மெதுவாய் அணைத்துக்கொள்ளலாம்" என்கிறார்கள். என்னே இவர்களின் பெருமை' இவர்கள்; குளிர்ச்சியாக இருப்பதால் சந்தனமென்று நினைத்துக்கொண்டு, பஞ்சேந்திரியங்களாகிற சர்ப்பங்களின்மேல் கையை வைத்துக் கொண்டு சொஸ்தமாகத் தூங்குகிறார்கள். தட்டி யெழுப்பி உண்மையை உணர்த்தினாலும், "தூக்கத்தில் எழுப்பாதே, சற்றுப்பொறு." என்கிறார்கள். ஆகையால் இவர்களை விட்டு, விழித்துக்கொண்டவர்கள் இனி என்ன செய்ய வேண்டுமென்பதை விசாரிப்போம்.

சிறைவாசம் செய்யும் ராஜகுமாரனுக்கு, விடுதலையடைந்தவுடன் பட்டாபிஷேகம் செய்தாலும் செய்யலாம். அல்லது சிறையிலேயே பட்டாபிஷேகம் செய்து, பின்னர் விடுதலை செய்தாலும் செய்யலாம். அதுபோல, பஞ்சேந்திரியங்களாகிய சிறையில் வாசம் செய்யும் ஆத்மா சகல பற்றுக்களையும் விட்டபிறகு ஈசுவரனை ஆராதிக்கலாம். அல்லது ஈசுவரனையடைந்தால், அதாவது அவரிடம் வேறு பிரயோஜனத்தைத் தேடாமல் பக்திசெய்து, சகல கருமங்களையும் அவருடைய கைங்கர்யமாகவே செய்துவந்தால், பற்று தானுக விட்டுப்போகும். எப்படியெனில், ஒரு பொம்மையை வைத்துக்கொண்டு தூங்கும் குழந்தைக்குத் தூக்கம் அதிகமாக ஆக, அதன் பிடிப்பும் தளர்ந்து கொண்டேவந்து முடிவில் பொம்மையைக் கீழே போட்டுவிடுதல் போல, பக்தி முதிர முதிர, பற்று விட்டுப்போகும். இக்கருத்தை நாயனுரும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்றார். நாள் முழுவதும் ஒருவன் எத்தனை ஞானசாஸ்திரங்களைப் படித்தாலும், கேட்டாலும், அன்று பத்தநிமிஷ நேரமேனும் ஒரு இடத்தில் உட்கார்ந்து, ஏகாக்கிர சித்தத்தோடு, தியானமோ அர்ச்சனையோ, தோத்திரமோ செய்து, கடவுளை வழிபடுவதற்கு ஈடாகாது. இதனாலேயே புலவர் பெருமானாகிய நாயனாரும்,

"கற்றதனா லாயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழார் எனின் ?"

என்றார். ஆகையால், ஒரு தினத்தில் எத்தனையோ மணி நேரங்களை, சாரமற்ற வீண் பேச்சுக்களிலும், ஸினிமாக்களிலும், டிராமாக்களிலும், செலவழிக்கும் நாம், சொற்ப நேரத்தையாவது பகவதாராதனத்தில் செலவழிக்க வேண்டும். இன்றேல், உண்டு உறங்குவதையே பொழுது போக்காகக் கொண்ட நாற்கால் விலங்குகளுக்கும், பகுத்தறிவுடைய மனிதனுக்கும் ஒரு வித்தியாசமு மில்லை.

பகவதாராதனத்திற்கு வேண்டிய உபகரணங்கள் நம்மிடம் ஒன்றும் இல்லையே யென்று நீங்கள் விசனப்படவேண்டாம். முக்கியமாக மூன்று உபகரணங்கள் கடவுளை ஆராதிப்பதற்காக வேண்டியவை. அவை மூன்றும் உங்களிடத்திலேயே இருக்கின்றன. அவற்றைப் புதிதாகத் தேடவேண்டிய அவசியமு மில்லை; ஒருவரைப்போய் இரவல் கேட்கும்படியான அவசியமு மில்லை. அவைகள்தான் மனம், வாக்கு, காயம் என்னும் உயர்ந்த உபகரணங்களாகும். அவற்றைக்கொண்டு நீங்கள் காரியம் செய்வதில் குறைவில்லை; அன்பு செய்வதில் குறைவில்லை. ஆனல், குடியானவன் வருஷமுழுதும் ஜலத்தைப் பாத்தியிலே பாய்ச்சாமல், பாழிலும் பள்ளத்திலும் பாய்ச்சிவிட்டு பயிர் வளரவில்லையே யென்று குறை கூறுவதுபோல, உங்கள் மனம், வாக்கு, காயமாகிய திரிகரணங்களையும் சர்வேச்வரன் பக்கல் திருப்பி விடாததே குற்றமாகும். அப்படிக் கொஞ்சகாலமேனும் சிரத்தையுடன் செய்து பாருங்கள். பிறகு ஆத்ம ஞானம் என்னும் பயிரானது செழித்தோங்கி வளர்வதை அனுபவசித்தமாய் அறிவீர்கள். "சர்வேச்வரனை ஆராதிப்பதற்கு முக்யமாக வேண்டிய மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று உபகரணங்கள் இருந்தாலும்

போதிய திரவியம் வேண்டாமா? அது எங்களிடம் இல்லையே'' என்று கேட்பவர்களைப் பார்த்து, நம்மாழ்வார் கீழ்வரும் பாசுரத்தால் உபதேசம் செய்கிறார்.

பரிவதில் ஈசனைப் பாடி
விரிவது மேவல் உறுவீர்
பிரிவகை யின்றி நன்னீர்தூய்
புரிவது புகை பூவே.

சர்வேச்வரன், தனது ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்னும் லீலையின் நிமித்தம் உண்டா யிருக்கும் அண்டகோடிகளாகிய லீலாவிபூதியையும், பேரின்ப வீடாகிய நித்ய விபூதியையும், தனக்கு ஐச்வர்யமாக உடையவனு கையால், பக்தன் அவனுக்கு ஒன்று கொடுத்து நிரம்பப் போவதில்லை. ஆயினும், ஒரு தகப்பன் தன் குழந்தைக்குக் கொடுத்த தின்பண்டத்தில் கொஞ்சம் எடுத்து, தன் குழந்தையே திருப்பித் தனக்குக் கொடுத்தால் அவன் அக் குழந்தையின் அன்பைப் பாராட்டி, அதை சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள் ளுதல் போல, சர்வேச்வரனும், தன் குழந்தையாகிய பக்தன் ஸமர்ப்பிக்கும் பதார்த்தம் கொஞ்சமா, அதிகமா, உயர்ந்ததா, தாழ்ந்ததா என்று பேதம் பாராட்டாமல், அவன் நெஞ்சில் ஈரம் இருக்கிறதா, அதாவது உண்மையான பிரீதியுடன் கொடுக்கிறானா என்று பார்த்து ஸ்வீகரிக்கிறான். மேற்கண்ட பாசுரத்தில் "பரிவதில் ஈசன்'' என்பது துக்கமில்லாத ஈசன் என்று பொருளாகும். எந்தக் காரணத்திற்காக துக்கமில்லாத ஈசன் என்றால் பகவான் சகல ஐச்வர்யங்களுக்கும் அதிபதியென்று தெரிந்த பக்தன், அவனை ஆராதிப் பதற்கு வேண்டிய பதார்த்தங்களோ, உபகரணங்களோ நிறைய இல்லையே யென்று துக்கப்பட மாட்டா னுதலால், சர்வேச்வரனும் துக்கப்படமாட்டான். பகவானுடைய சுபாவம் தெரியாது, பக்தன் துக்கப்பட்டால் பகவான் "அந்தோ! இவன் நம்முடைய சுபாவம் தெரியாமல் அநாவசியமாக துக்கப்படுகிறானே'' என்று தானும் துக்கிப்பான் என்றபடி.

"பரிவதில் ஈசன்'' என்றால் பக்ஷபாதமில்லாத பகவான் என்றும் ஒரு அர்த்தம் உண்டு. இதர தேவதைகள் பரிபூர்ண மில்லாதவைக ளாதலால், தமக்கு வேண்டியதை தன் பக்தர்கள் சமர்ப்பிக்காவிட்டால், அவர்களுக்கு இன்னபலனைக் கொடுக்கமாட்டேனென்று குறைவான பலனைக் கொடுப்பதாலும், தமக்கு வேண்டியதைக் கொடுப்பவர்களிடம் திருப்தியடைந்து முழு பலனைக் கொடுப்பதாலும், பக்ஷபாத முள்ளவைகளாக இருக்கும். எம்பெருமானோ, சகல ஐச்வர்யங்களும் நிரம்பியுள்ள பரிபூர்ணனுக இருப்பதால் தனக் கொன்றும் வேண்டியதில்லை யாகையால், தனக்கு ஒன்றுங் கொடுக்கவில்லையே யென்று பக்தர்களிடம் பக்ஷபாதமாக இருக்கமாட்டான். மேலும், "எனக் குக் குறைவாகக் கொடுத்தான். அந்த தேவதைக்கு அதிகமாகக் கொடுத் தான்'' என்று நினைத்தும் பலனைக் கொடுப்பதில் பக்ஷபாதமாக இருக்க மாட்டான். ஸ்ரீயः பதியாகிய நாராயணனே பரதேவதை, அவனே சர்வ ரக்ஷகன் என்று நம்பி, உள்ளன்புடன் ஒரு கும்பிடு மாத்திரம் போடுபவர்களுக்குக் கூட பரமபதத்தைக் கொடுத்து, இன்னும் கொடுப்பதற்கு ஒன்றும் இல்லையே யென்று வெட்கப்பட்டு நிற்கும் பெருந்தகையாள னுகையால், அவனுக்குப் பக்ஷபாதம் என்பதே தெரியாது. இதனுலேயே தொண்டரடிப்பொடி யாழ்

வாரும் "அரங்கனுய பித்தனைப் பெற்றும் அந்தோ பிறவியுள் பிணங்குமாறே" என்றார்.

ஆனால், "இவ்வளவு கருணையுள்ளவன் ஏன் நம்மை உடனே வந்து ஆட்கொள்ளலாகாது" என்று கேட்கலாம். இதற்கு பதில் "எண்ணின வாராகா இக்கருமங்கள்" என்று நம்மாழ்வார் சொல்லியிருக்கிறார். அதாவது, யாராவது மோக்ஷம் வாங்கிக்கொள்ள மாட்டார்களா என்று பகவான் ஆவலுடன் எதிர்பார்த்திருக்கும் எண்ணத்தையும் ஆகாமற்படி செய்யும்படியான அவ்வளவு கொடிய பாபங்கள் செய்திருக்கிறோம் என்பது கருத்தாகும். ஆயினும் அதற்காக அதைரியப்படவேண்டாம். நாட்டாருக்குத் தெரிவதற்காக ஒரு அடி எடுத்துவையுங்கள்; மற்ற காரியங்களை பகவான் பார்த்துக்கொள்ளுவார்.

ஒருவன் தன் பந்துக்களுக்கு விருந்து செய்வதாக வைத்துக் கொள்ளுவோம். அவர்கள் அந்த விருந்தில் குற்றம் கண்டுபிடிப்பது சகஜம். அவனே தன் தகப்பனுக்கு விருந்து செய்து, சாப்பாடு நன்றாக இல்லாவிட்டாலும், பிதாவானவன் "நான் பதார்த்தங்கள் தாராளமாகக் கொடாதது என்மேல் பிசகு. பாத்திரங்களையும் சரியாக சுயம்பூசிக் கொடுத்திருக்க வேண்டும்" என்று புத்திரவாஞ்சையால் குற்றத்தைத் தான் ஏற்றுக்கொள்ளுவான். அதுபோல, பகவான் தன்னை ஆராதிப்பவர்கள் மனதில் உண்மையான பிரீதி இருக்கிறதா என்று கவனிப்பானே யொழிய, ஆராதிக்கும் விதத்தில் ஏற்படும் குற்றத்தையும், பதார்த்தங்களில்லாத குறையையும் பாராட்டாமல் இருப்பதுடன் அவற்றைத் தன் குற்றமாகவே ஏற்றுக்கொள்ளும் உத்தமகுணம் வாய்ந்தவன்.

பகவான் ஸர்வவஸ்து பரிபூர்ணனாக இருக்கிறார். அதாவது, ஒரு அணுவில், ஒரு ஜலத்துளியில், இருக்கும் கடவுளும் தன்னுடைய பரிபூர்ணமான சக்தியுடனும் குணங்களுடனும் விளங்குவதால், வேண்டுமென்று நினைத்தால் அந்த இடத்திலிருந்தே தன் சங்கல்பமாத்திரத்தில் கோடானுகோடி அண்டங்களை ஸ்ருஷ்டி செய்யும்படியான சக்தியுடன் விளங்குகிறார். அப்படியானால், அகண்டாகாரமான வடிவையுடைய கடவுள் அணுவிலும் சர்வசக்தியுடன் விளங்குவதாகச் சொல்லுவதால், தன்னை சுருக்கிக்கொண்டு, நெருக்கத்துடன் அசௌகரியப் பட்டுக்கொண்டு அணுவில் இருப்பதாக நினைத்துவிடவேண்டாம். பதினாலு உலகங்கள் கொண்டதாகிய ஒரு பிரம்மாண்டத்தை ஒருவன் சிருஷ்டித்துக்கொண்டு, தான் ஒருவன் மாத்திரம் அந்த அண்டத்தில் வசித்தால் எவ்வளவு தாராளமாகவும், சௌகர்யமாகவும் அதில் வசிப்பானோ, அவ்வளவு சௌகர்யமாகவே பகவானும் ஒரு அணுவில் இருக்கிறார். இக்கருத்தையே நம்மாழ்வாரும், "பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் பரந்த அண்டம் இதென" என்று தமிழ் வேதமாகிய திருவாய்மொழியில் கூறியிருக்கிறார். மேற்கூறியவாறு பகவான் ஸர்வவஸ்து பரிபூர்ணனாக இருப்பதால், பரிபூர்ணமான சரீரத்தால், ஒரே புஷ்பமாக இருந்தாலும் அதுவும் பரிபூர்ணமாக இருப்பதால் அதையெடுத்து, பரிபூர்ணனாகிய பகவானுக்கு ஸமர்ப்பித்தால் மிஞ்சுவது, அதாவது பலன் பரிபூர்ணமேயாகும். ஆகையால் ஒருவன் நாம் ஹேமமான சரீரத்தில் இருப்பதால் மஹா மஹிமாதிசயங்கள் உள்ள பகவானை ஆராதிக்க யோக்கியதை யுள்ளவனல்ல னென்றாவது, அவனுக்கு சமர்ப்பிப்பதற்குப் போதிய பதார்த்தங்கள் இல்லை யென்றாவது குறையாக நினைக்க வேண்டியதில்லை.

"ஈசனைப் பாடி" என்பது "பரமபதத்தில் இருக்கும் பரவாசுதேவனாகிய நாராயணனை அங்கு போய்ப்பாடி" என்று பொருளாகும்.

"விரிவது மேவல் உறுவீர்" அதாவது "ஞானத்திலும் கைங்கர்யங்களிலும் விரிவை அல்லது ஜீவாத்ம சொரூபத்தை யடைவதாகிய ஸம்பத்தை அடையப் பார்ப்பவர்களே" என்பதாம்.

"பிரிவகையின்றி" அதாவது "பகவானை ஆராதிப்பதற்கு வேண்டிய திரவியமோ உபகரணங்களோ இல்லையென்று அவரிடமிருந்து பிரியப் பார்க்காமலும், இதர பிரயோஜனத்தை அவரிடம் கேட்டால் அவற்றைக் கொடுத்து நம்மை விலக்கிவிடுவாராகையால் வேறு புருஷார்த்தத்தை அபேக்ஷித்து அவரிடமிருந்து பிரியப் பார்க்காமலும்" என்று பொருளாகும்.

"நன்னீர் தூய்" சுத்த ஜலத்தைத் தூவி என்பது இதன் பொருளாகும். நல்நீர் என்றால் உயர்ந்த கங்காஜலம் என்று நினைத்துவிட வேண்டாம். ஏலக்காய் முதலிய வாசனை திரவியங்கள்கூட கலக்காத வெறும் ஜலமே போதுமென்றபடி. யமுனை, ஸரஸ்வதி ஆகிய இரண்டு நதிகளுடன் சேரும் இடத்திற்கு முன்னுள்ள கங்கையை சுத்த கங்கையென்று வழங்குவதுபோல, வாசனைத் திரவியங்கள் கலக்காத ஜலத்தை "நன்னீர்" என்றார் ஆழ்வார். ஜலத்தை உத்தரணியில் எடுத்துக்கொண்டு, கையை இன்னமாதிரி வைத்துக் கொண்டு, இத்தனை தரம் சமர்ப்பிக்க வேண்டும் என்கிற நியதி யில்லாமல், சாதாரணமாகக் கையால் ஜலத்தை எடுத்துத் தூவி எறிந்தாலே போதுமானது என்பதைக் காட்டுவதற்காகவே "தூய்" என்னும் பதத்தைப் போட்டார்.

"புரிவதுவும்" நீங்கள் சமர்ப்பிப்பதுவும், அதாவது நீங்கள் பகவதாராதனத்தின்போது சமர்ப்பிக்க வேண்டியது என்னவென்றால்.

"புகைபூவே" தூபமும் புஷ்பமுமே யாம். வேறொன்றும் வேண்டியதில்லை யென்று தாத்பர்யம்.

கூரத்தாழ்வான் திருக்குமாரராகிய பட்டர் இதற்கு வியாக்கியானம் உபந்யசிக்கும்போது "அகிற் புகை, கருமுகைப்பூ என்றாற்போல விசேஷித்துச் சொல்லாமையால் எந்தப் புகையைக் கொண்டாயினும், எந்தப் பூவைக் கொண்டாயினும் எம்பெருமான் திருவடிகளில் அடிமை செய்தாலும் அவன் அதனை அங்கீகரித்தருள்வான்" என்று அருளிச்செய்து, மற்றும் அதன் விவரணமாக "சருகையிட்டுப் புகைத்துத் தூபம் சமர்ப்பித்தாலும் அமையும்; கண்டங்கத்திரிப் பூவையிட்டு அர்ச்சிக்கவும் அமையும்" என்று சொன்ன வளவிலே நஞ்சீயர் "தகண்டகாரிகா புஷ்பம் தேவாய விநிவேதயேத்" என்று கண்டங் கத்திரிப்பூவைப் பகவதார்ச்சனைக்கு உதவாதாகச் சாஸ்திரம் விலக்கி யிருப்பதற்கு என்ன காரணம்" என்று கேட்டார் பட்டர். "அதன் கருத்து, அவனுக்கு ஆகாதென்கிறதன்று; ஆவலோடு சென்று பறிக்கிற அடியவர் கையிலே முள் தைக்கு மென்பதுபற்றியே தவிர்த்தது காணும்;

"கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும்
முள்ளார் முளரியும் ஆம்பலும் முன்கண்டக்கால்
புள்ளாய் ஓர்ஏனமுமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று
உள்ளாதார் உள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே."

என்ற பெரிய திருமொழிப் பாசுரத்தில், திருத்துழாயோடு, காகணம்

பூவோடு, வில்வ தளத்தோடு, தாமரை மலரோடு, அல்லிப் புஷ்பத்தோடு வித்தியாசமில்லாமல் அனைத்தையும் திருமங்கையாழ்வார் அருளிச் செய்கையாலே, அர்ச்சிக்கிற உபகரணம் பிரதானமன்று; அர்ச்சிக்கிறவனது அன்பே முக்கியம். அன்பில்லாதவன் இடில் திருத்துழாயும் ஆகாது; அன்புடனே இடின் காகணம் பூவும் ஆகும் என்பது விளங்குகின்றதன்றோ? இங்ஙனமன்றியே, அப்பிராகிருத வஸ்துவான பரமாத்மாவின் அர்ச்சனைக்கு ஏற்றதொரு பிராகிருத வஸ்துவும் உண்டோ?'' என்று சொல்லியருளினார்.

மற்றொரு சமயத்தில் நஞ்சீயர் பட்டரை நோக்கி, "பகவானுடைய திருநாமத்தைச் சொல்லும்போது ஆசார நியமமுடையவனாய்ச் சொல்லவேண்டுமென்கிற நியதியுண்டோ?'' என்று கேட்க, பட்டர், 'கங்கையிலே முழுகப் போமவனுக்கு வேறொரு தீர்த்தத்திலே நீராடி அதன் பின்பு போகவேண்டுமென்பதுண்டோ? இல்லையே. அது போலவே, பகவந்நாமத்தைச் சொல்லுகைக்கும் ஆதாரமே வேண்டுவது; அதனை யுடையவர்களே அதிகாரிகள்' என்று அருளிச் செய்தார்.

காமுகர்கள் அவர்கள் நேசிக்கும் ஸ்திரீகளுக்காக எவ்வளவு கஷ்டப்பட்டாலும், அது அவர்களுக்குக் கஷ்டமாகத் தோற்றாது ஸுகமாகத் தோற்றுவதுபோல், மெய்யன்பர்கள் எம்பெருமானுக்கென்றே உயிர்வாழ்வதால், அவர்கள் அவன் பொருட்டே செய்யும் சகல கர்மங்களும் ஸுகமாகவே இருக்கும். பகவதாராதநமும், பகவந்நாமத்தை உச்சரித்தலும், பகவதநுபவமும், அவர்களுக்கு எப்படியிருக்குமெனில், சர்க்கரை நிலத்தில் தேன் பாய்ச்சிப் பயிரிட்ட திராக்ஷைப் பழம்போல் இனிமையாக இருக்கும். ஆனால், பகவத் விஷயங்கள் ஏன் எல்லோருக்கும் ருசியாக இல்லையென்று கேட்கலாம். பித்தம் அதிகமாய் உள்ளவனுக்குப் பால் கசப்பதுபோல, கர்மம் அதிகமாக உள்ள பாபாத்மாக்களுக்கு பகவத் விஷயம் ருசிக்காது; கசப்பது சகஜந்தான். பாபம் குறைவாக உள்ளவர்களுக்கே, பகவானிடத்தில் நம்பிக்கையும், பகத் விஷயத்தில் ருசியும் இருக்கும்.

இதுவரையில் நாம் கூறியவாற்றால், ஒவ்வொருவரும் தத்தம் சக்தியானுஸாரம், உள்ளன்புடனே தினந்தோறும் சிறிது நேரமேனும் பகவதாராதனம் செய்யவேண்டுமென்று ஏற்படுகிறது. இதோடு நில்லாமல் இன்னொரு காரியம் செய்து வந்தீர்களானால், உங்களுக்கு மேற்பட்ட ஞானிகள் ஒருவருமில்லை. அதாவது, "பகவான், தன்னால் கொடுக்கப்பட்ட சரீர இந்திரியாதிகளைக்கொண்டு, தனது ஆராதன ரூபமான கர்மங்களை, தனது லீலா விபூதியின் பொருட்டு, தானே செய்வித்துக் கொள்ளுகிறான்'' என்னும் எண்ணத்துடன் சகல காரியங்களையும் செய்யவேண்டும். "வருந்தினால் வாராததொன்றில்லை'' என்றபடி, பழக்கத்தினாலும் விடாமுயற்சியினாலும் இந்த எண்ணமானது மனதில் வேரூன்றும்படி செய்துவிட்டால், நீங்கள் வெகு சீக்கிரம் கடவுள் கிருபையை யடைந்து, சரீர யாத்திரை முடிந்த பிறகு பேரின்ப வீட்டையும் அடையலாம்.

---

# பத்துப் பாட்டும் கரிகாலனும்

(M. சேதுமாதவன்.)

அமிழ்தினுமினிய தமிழ்மொழி வழங்கும் நன்னாட்டினரான தென்னாட்டினர்க்குத் தமிழன்னையால் அளிக்கப்பட்ட மங்கலில் செல்வம் சங்கநூற்களாம். இவை யாவும் இடைக்கால இருளின் வாய்ப்பட்டுச் சின்னாள் ஒளியிழந் திருந்தன. தமிழ்செய் மாதவப் பயனால் பிற்காலத்துத் தோன்றிய பெரியா ரொருவர் காலக்கூற்றின் நாவை யறுத்து மாசுமூழ்கிக் படிந்த அருநூற்களாய விழுமணிகளைக் கழுவினார். இவருடைய கூரிய அறிவினாலுஞ் சீரிய உழைப்பினாலும் சங்கநூல் யாவுங் கதிரொளி பெற்றுத் தமிழணங்கை யணிபெறச் செய்தன. இந் நூற்களி லொன்று பத்துப் பாட்டாம்.

பத்துப் பாட்டெனுந் தொகைநூலில் கரிகாற் பெருவளத்தானைப் பற்றிக் கூறும் பாட்டுக்கள் இரண்டுள. அவை பொருநாாற்றுப்படையும், பட்டினப்பாலையும் ஆம். முன்னது புறத்தின் பாலாயது; பின்னது அகத்தைத் தழுவியது. இவ் விரண்டிலுங் கரிகாலனுடைய பெருமைகளைப் பரக்கக் காணலாம்.

முற்காலத்துப் புலவர் பெருமக்கள் தங்களுடைய நூற்களில் பாட்டுடைத்தலைவனின் கீர்த்தியையும், நாட்டுடைப் பல்வகை வளங்களையும், மக்களின் வாழ்க்கையையும், காலத்தியல்பினையும் படிப்போ ருளத்தில் பதிந்திடுமாறு சித்திரித்துக் காட்டு மியல்பினர். எனவே பண்டை யரசர்களின் வரலாற்றினையும் அரசியல், நாட்டியல் முதலியவற்றையும் அறிவதற்கேற்ற சாதனங்களா யிருப்பவை தமிழ்ப்பழ நூற்களே. மூதறிவினராகிய முடத்தாமக் கண்ணியார் தாம் பாடிய ஆற்றுப்படையில் கரிகாலனின் மாண்பினையும், வள்ளன்மையினையும், நாட்டின் சிறப்பினையும் நலம் பெறக் கூறுவார். 'நாட்டின் வளப்பத்தினை நயம்பெறக் கூறுதலிலும், மக்களியல்பினை முறையொடு மொழிதலிலும், கரிகாலனின் வீரத்தைத் திறமுற உரைப்பதிலும் வல்லவர் உருத்திரங் கண்ணனார். இனி நாம் இவ்விருவர் பாடிய நூற்களி னின்றுங் கரிகாலனைப்பற்றி யறியக்கூடிய விடயங்களைப் பாகுபாடு செய்து ஆராய்வோம்.

## 1. கரிகாலனின் தந்தை

தொன்மையிற் சிறந்து, சீருஞ் சிறப்பு மொருங்குட னமைந்து, தமிழ் நாட்டின்கண் மேம்பட் டிலங்கியது சோழர்குலம். இக் குலத்தில் இளஞ் சேட் சென்னியெனும் அரசன் ஒருவன் உதித்தான். இவன் போரில் வல்லவன்; வடிவி லழகன்; தேர்பல வுடையான். எனவே இவன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி யென அழைக்கப்பட்டான்.

## 2. பிறப்பு

இச் சோழனுக்கு அழுந்தூர்வேள் மகளிடத்து மகனுய்த் தோன்றியவன் கரிகாலன். கரிகாலனின் பிறப்பு வரலாறு கவனிக்கத்தக்கது. இவன் தாயின் வயிற்றிலேயே நல்ல முகூர்த்தம் வரும் வரையில் தங்கி யிருந்து நல்லோரையில் பிறந்ததனுலேயே அரசு பெற்றுப் பீடுடையோ னுகினுன். இதனை யுட்கொண்டே மூடத்தாமக் கண்ணியார் இவனைத் தாய் வயிற்றிருந்து தாய மெய்தினேன் எனக் குறிப்பிடுகின்றூர். தமிழ்நூற்களில் கோச்செங்கட் சோழனுடைய பிறப்பைப்பற்றி யாராயு மிடத்தும் இது போன்ற வரலாறே காணப்படுகிறது. எனவே இதனுல் கரிகாலனுடைய பிறப்பு வரலாறு வலிபெற்று விளங்குகின்றது. இத்தகைய பிறப்பாளர் கருவிலே திருவுடையாரெனக் கூறப்படுவார்.

## இளமைப் பருவம்

இளமையிலேயே தந்தையை யிழந்து தன்னுடைய பெரு முயற்சியாலே உன்னத பதவிபெற்ற வீரர் ஓர் சிலர். அவர்களிற் சிறந்தோன் கரிகாலன். தந்தை யிறந்ததும் தாயத்தாருக்குள் அரசுரிமையைப்பற்றிக் கிளர்ச்சி யேற்பட்டதைக்கண்டு, இச் சிறுவன் உயிருக்கஞ்சி உறையூ ரிகந்து கரூரில் கரந்துறைவா னுயினன். அக்காலத்து முறைமைப்படி அரசிற் கேற்றூ னெருவனைத் தேர்வான் கழுமலத்திருந்த களிற்றினைக் கட்டவிழ்த்து விட்டிட, அஃது கரூருக்குச் சென்று கரிகாலனை யெருத்தத் தேற்றிக் கொணர்ந்து சேர்த்தது. எனினும் பகைவர் இவனைச் சிறையிலிட்டனர்.

கரிகாலனின் புகழுக்கு வித்தாய் நின்றது அவனுடைய சிறைவாசமே. உடலைச் சிறைசெய்ய பகைவரால் கூடுமேயன்றி உயிரையும், வீரமாண்பினையுஞ் சிறை செய்வார் யார்? சுடினுஞ் செம்பொன் தன்னெளி குன்றுமா? கூட்டில் வளருங் கொடுவரிக் குருளையெனச் சிறையில் வளர்ந்தான் கரிகாலன். சிறைவாசம் இவனுடைய பெருமைக் குணத்தை வயிர மூறச் செய்தது. மறனிழுக்கா மானமுடைய கரிகாலனும் கருவியொடு காலங் கருதி யிருந்து சீர்த்த விடத்துப் பகைவரின் திண் காப் பெறிந்து, அவர்களைப் பொருது; வென்று தன்னுடைய மாமன் இரும்பிடர்த் தலையனின் உதவியால் தாயம் பெற்றுன்.

## கரிகாலனின் போர்கள்

தாயம் பெற்ற கரிகாலனின் பகைவர் பலர். இவனுக்கு அவர்களை வெல்லுவது அவசியமாயிற்று. கரிகாலன் ஆண்மையிற் சிறந்தவன். பிறந்த போழ்தே இருளைக் கடியும் பேரொளியுடனே இளஞ்சூரியன் தோன்றலைப் போல, இவனுந் தவழ்கின்ற பருவத்திலேயே இகல் வெல்லு மாற்றலைப் பெற்றிருந்தான். பிறகு சூரியன் விசும்பிற் படர்தல்போலப் பகைவர்மீது போர்க்கெழுந்தான்.

மூடத்தாமக் கண்ணியார் கரிகாலன் வெண்ணிப் பறந்தலையில் நடந்த போரில் வெற்றிபெற்றதைக் கூறுகிறூர். யாளியி னணங்கு மூலையுண்ணலைத் தவிர்த்துத் தலைவேட்டத்திலேயே களிறடுதலை யேய்ப்பக் கரிகாலன் இரு

பெரு வேந்தரையும் ஒரு களத்தவியச் செய்தான். அவ்வாறு தோல்வியுற்ற வர் பனம் பூச் சூடிய சேரனும், நிம்பமாலை பூண்ட பாண்டியனுமாவர். "கரி வேந்தனொடு வெண்ணிப் பறந்தலை—பொருது புண்ணாணிய சேரலாதன்" எனவரும் அகநானூற் றடியால் இச்சேரன் பெயர் சேரமான் பெருஞ்சேரலாதனெனத் தெரிய வருகிறது.

வெண்ணிப் பறந்தலையிலேயே கரிகாலனைப் பதினொரு வேளிரு மெதிர்க்க, அவன் அவர்களைச் செறுமுகத்தில் அழைத்தான். இது "காய் சின மொய்ம்பிற் பெரும் பெயர்க்கரிகால், ஆர்கலி நறவின் வெண்ணிவாயில், பதினொருவேளிரொடு வேந்தர் சாய" என்பதாலும் "இருங்கோவேள் மருங்குசாய" என்பதாலும் பெறப்படுகின்றது. பிற சான்றுகளிலிருந்து கரிகாலன் வாகைப் பறந்தலையிலும் போர் செய்தானென் றறிகின்றோம்.

## போர்த்திறன்

குடிகளுக்கு உட்பகை, புறப்பகை முதலியவற்றால் ஊறு நேரா வண்ணம் காப்பது மன்னன் கடமை. அரசன் வாளா இருப்பின் பகைவர்கள் அவனை யடுத்தடுத்துத் தாக்கி இன்னல் பல இழைப்பர். எனவே அறிவுடையரசனுக்குத் தன் அங்கங்களி லொன்றாய படையைப்பெருக்கி, அறப்போராற் றிப் பகையைத் தொலைத்துக் குடி புறங் காத்தலே மாண்பாம். இன்னணங் கரிகால னியற்றிய போர்கள் பல.

கரிகாலனின் போர்த்திறன் சாலவும் வியக்கத்தக்கதே. அவன் பராக்கிரமசாலி. அவனுடைய போர்கள் படிப்போர்க்கு அச்சத்தை விளைவிக்கின்றன. மருதநிலத்தோராய மாற்றாரைப் பொருமிடத்துக் கரிகாலன் அந்நிலக்குடிகளை யோட்டி, அக்காலத்து வழக்கப்படி நீர்நிலைகளை யுடைத்துப் பொய்கையும், வாவியும் நீரறச் செய்தான். நீர்வளங்குன்றவே நிலவளங் குறைந்தது. அங்கு கொழுங்காற் புதவமும், செருந்தியு முளைத்தன. அஃது மான்க ளியங்கும் வனமாய் மாறியது. விளைநிலம் இவ்வாறு விரைவில் அழிந்தது. பகைவர் நாட்டிலுள்ள அம்பலங்களோ பிடிபுணர் வேழம் உறைவிட மாயின. நறுமலர் மணத்தொடு, யாழொடு முழவஞ்செய் யின்னிசை நிரம்பி விளங்கிய பகைவர் பதியிலுள்ள மன்றங்கள் 'பாழடைந்து ஓரி முழங்கவும், கூகையொடு ஆண்டலை கூவவும், கூளியொடு பேய்மகள் துவன்றவுந் தக்க இடங்களாய் மாறின. திருவுறை நீள்தெருவும், வானளாவிய நன்மாட வீடுகளும் பகலிலேயே கூகைகளின் கூவலோசையால் எதிரொலி செய்தன. இவ்வாறு பகைவர் நிலம் பாழ்பட்டது.

கண்டோர் யாவரும் "இவன் மலையகழ்க்குவன்; கடல் தூர்க்குவன்; வான் வீழ்க்குவன்; வளிமாற்றுவன்" எனக் கரிகாலனின் வீரத்தைப் புகழ்ந்துரை செய்தனர். ஒளியர், அருவாளர், வடவர், குடவர் ஆகிய இவர்களின் றிறல் அடங்கிற்று. இவன் வடநாட்டிலும் போர் புரிந்து தன் முத்திரையாகிய புலி வடிவை மேருவில் பொறித்தான். அங்கு முத்துப் பந்தரினையுந் திறை யாகப் பெற்றான். இவ்வாறு கரிகாலன் "எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்பவுஞ் செய்யார்த் தேயந் தெருமரல் கவிப்பவும்" ஆட்சிசெய்தான். வெற்றித் திருவும் இவன்பால் வதிந்தாள்.

## குணம்

இத்துணைச் சிறப்பு வாய்ந்த திண்டிறல் வேந்தன் மாற்றார்க்குக் கூற்றாயும் இரவலர்க் கினியனாகவு மிருந்தான். இவனுடைய கொடை வளத்தைப் பற்றிப் பொருநராற்றுப்படையில் நன்கு கூறப்பட்டுள்ளது. கரிகாலன் காட்சிக் கெளியனாயும், கடுஞ் சொல்லனன்றி இனியசொல்லினனாகவு மிருந்தான். இவனுடைய வாயிலை "நசையுநர்த் தடையா நன்பெருவாயில்" என்பர் முடத்தாமக் கண்ணியார். பரிசில் பெறவரும் பொருநனின் கையது கேளா அளவிலேயே ஒய்யென,

"கேளிர் போலக்கோள் கொளல்வேண்டி,
வேளாண் வாயில் வேட்பக் கூறி
கண்ணிற்காண நண்ணுவழி யிருத்தி."

என்புகு குளிர்கொள அன்பால் நோக்கி, தேசு மிக்க தூசுநல்கி, மகிழ்ப்பதத் தோடு அவிழ்ப்பத மளித்து உபசரிக்கு மியல்பினன் கரிகாலன். பொருநன் மனமகிழ் சிறப்பப் பன்னாட் கழித்துப் பின்றைத் தன் பதிக்குப் பெயர்ந்து செல்லுகையில் தூங்கு நடைக்குழவியொடு பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென வரையின்றி யீயும் வள்ளன்மை யுடையோன். பின்னர் இரவலனைப் புரவலன் வழியனுப்புவதைப் படிக்கில் நாம் வியப்பும், மகிழ்ச்சியும் அடைகின்றோம். தந்தத்தினால் செய்த கொடுஞ்சி நெடுந்தேரில் தாறுகளைந்து இரவலனை யேறென்று எத்தியவனோடு நெடுநாள் நட்புடையோன் போல் காலின் ஏழடி பின்சென்று அரசன் வழிவிடுந்தன்மை வியக்கத் தக்கதே. இவனுடைய கொடைத்திறனைப்பற்றி யன்றோ பொருநராற்றுப்படை பாடப்பட்டது. பட்டினப்பாலை பாடிய உருத்திரங்கண்ணனார் பதினாயிரம் பொன் பெற்றதையும் நாம் அறிகின்றோம்.

## இவன் குடும்பம்

இதைப்பற்றி யிரண்டு வரிகளே பட்டினப்பாலையில் காணப்படுகின்றன. மகளிரால் முயங்கப்பெற்றதும், குழவியாலேறி விளையாடப்பட்டது மான சந்தன மணிந்த அகன்ற மார்பினன் கரிகாலன் என்பர். பிற சான்றுகளிலிருந்து இவன் நாங்கூர் வேளின் மகளை வேட்டானெனத் தெரிய வருகிறது. கரிகாலனுக்கு நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என ஆண் மக்கள் மூவரும், ஆதிமந்தியார் என்னும் நல்லிசைப்புலமை வாய்ந்த மகளுமிருந்தார்கள்.

## வேறு பெயர்கள்

இச் சோழனின் இயற்பெயர் அறிந்திலம். இவன் ஒருகால் இளமையிற் சிறையி லிடப்பட்ட பொழுது இவனைக் கொல்லும் பொருட்டுச் சிறைக் களத்தைப் பகைவர் தீக் கொளுவினர். அப்போது சிறுவன் தப்பி வெளியேற முயலுகையில் கால் நெருப்புற்றுக் கரிந்துபோன காரணத்தால் கரிகாலனென்ற பெயரைப் பெற்றான். இது "முச்சக்கரமு மளப்பதற்கு"... என்ற வெண்பாவால் பெறப்படுகிறது. இவனைக் கருவிலே திருவுடையானென அழைப்பதன் காரணத்தையும் முன்னரே கூறியுள்ளோம். இவன்

தன்னுடைய நாட்டை வளம்படுத்திச் செல்வம் பெருக்கினமையின் திருமாவளவனென்ற பெயரையும் பெற்றான்.

## நாட்டின் சிறப்பும் தலைநகரும்

ஒரு நாட்டினது பொருள்வளத்திற்கு நீர்வளமும், நிலவளமும் இன்றியமையாத கருவிகளையும் கங்கையிற் புனிதமாய காவிரியாயும் அகன் கிடக்கையையுமுடையது சோழநாடு. வற்கடம் ஏற்பட்டு வான்பொய்ப்பினுந்தான் பொய்க்காது பொன்னி புரக்கும் நாட்டின் பெருவளம் இத் தன்மையதென கூறற்பாற் றன்று. இந்த நாட்டின் வளப்பத்தினை முடத்தாமக்கண்ணியார் திறமபடத் திணைமயக்கத்தோடு எடுத்துக் கூறுவார். சோழவளநாடு சோறுடைத்தென்பதனையே இவர் வலிபெற எடுத்துரைப்பார். இத்தகைய நாட்டிற்குத் தலைநகரா யிருந்தது காவிரிப்பூம்பட்டினம். இது கடற்கரையின் மருங்கிருந்தது.

## வாணிகச் சிறப்பும் செல்வப் பெருக்கும்

காவிரிப்பூம்பட்டினம் கடற்கரையி லிருந்ததால் வியாபாரத்திற்குச் சாதகமா யிருந்தது. மக்கள் அயல்நாட்டாரோடு நீர்மார்க்கமாக வியாபாரஞ் செய்யத் தலைப்பட்டனர். வாணிகத்தொழில் சிறந்தோங்கிற்று. அயல் நாட்டு நிமிர் பரிப்புரவியும், ஈழத் துணவும், கடாரத்து நுகர் பொருளும் இங்கு வந்து குவிந்தன. கடன்மேற் செல்வார்க்கு உதவியாய்க் கலங்கரை விளக்க மொன்றைக் கரிகாலன் நிறுவினான். நிலமார்க்கமாகவும் பிறதேசங்களோடு வியாபாரம் நடந்தது. "வடமலை மணியும், குடமலை ஆரமும், தென்கடல் முத்தும், குணகடல் துகிருங், கங்கை வாரியும், காவிரிப்பயனும்" வளந்தலை மயங்க வந்திங் கீண்டின. வணிகரும் வாய்மையிற் பிறழாது தந் தொழிலை நடத்தினர்.

அரசன் இவ்வாறு வந்த பொருள்களுக்கும், ஏற்றுமதிச் சரக்குகளுக்குஞ் சுங்கம் வசூலிக்கச் சுங்கச் சாவடிகளை யேற்படுத்தினான். தொல்லிசை பெற்ற சுங்கங் கொள்வோரும் தந்தொழிலில் சிறிதேனும் பிறழார். ஏற்றுமதி, இறக்குமதிச் சரக்குகளுக்குக் காரியக்காரர் அரசனது புலி முத்திரையைப் பொறித்தனுப்புவர்.

இதுவேயு மன்றிப் பண்டமாற்று முறையும் அக்காலத்துண்டு. வெள்ளையுப்புக்கு நெல்லைக்கொண்டு படகு வருமியல்பு பட்டினப்பாலையால் தெரியவருகிறது. இவ்வாறு வணிகமக்கள் வளர்பொரு ளீட்டினர்.

## கரிகாலன் காலத்துச் செய்திகள்

மதிற் கதவில் அரசனது பொறியைப் பொறித்தல், அறநிலைஇய அகனட்டி லமைத்தல், சடைமுனி வரங்கிவேட்டல், போரிற் சிறந்த வீரருக்குக் கல் நடுதல், பரதவர் மனைவியொடு சுறவின்கோடு நட்டுத் தெய்வ வழிபாடு செய்தல், மகளிர் தழையுடுத்தல், செவ்வேள் வெறியாடல் முதலிய இவன் காலத்து வழக்கங்களை நாம் பத்துப்பாட்டா லறிகின்றோம். நாம் இப்பொழுது பலகைகளை (Boards) உபயோகிப்பது கரிகாலன் காலத்தில் பலவகை பதாகைகளை யுயர்த்தினர். பணியத்து மஞ்சிகைக்குக் கொடி கட்டி

யிருக்கும். நல்லாசிரியர் உறழ்குறித்துக் கொடி கட்டுவர். நாவாய் மிசையிலும், கள்ளுக்கடைகளிலும் கொடி பறக்கும்.

மக்கள் மது வருந்துவதும், புலாலுண்பது முண்டு. அவர்கள் பலவித அணிகலன்களையும், ஆடைகளையும் அணிந்திருந்தனர். எடில் தாமரை, நூலின் வலவா நுணங்கரிமாலை, வாலொளிமுத்தம், பூங்குழை, தொடி, மேகலை முதலிய பொன்னாலாய நன்கலம் பலவும் வழங்கப்பட்டன. கத்திரிகையின் உபயோகமும் அறிந்திருந்தனர். மக்க ளணிந்த ஆடைகளைப்பற்றி முடத்தாமக்கண்ணியார் கூறுகையில் தமிழராகிய நம் மனம் விம்மிதம் அடைகிறது. மக்கள் பட்டாடை யணிவர். ஆடையில் பூக்கனிந்திருக்கும்; அரவுரியென்ன மென்மையாயும், நோக்கு நுழை கல்லா நுண்மையாயும், கொட்டைக்கரையினை யுடையதாயுமுள்ள ஆடைகளை யரசன் பரிசில் நல்கினன். இயந்திரத்தி னுதவி சிறிதுமின்றிக் கையால் செய்யப்பட்ட ஆடையின் நயம் வியக்கற் பாலதே!

அரசன் மதவிடயங்களில் ஒரே மனப்பான்மையன். இவனது தலைநகரில் தவப்பள்ளிகளும், வேள்விச்சாலைகளும், காளிகோவில்களும் மல்கி யிருந்தன.

இம் மன்னனுடைய காலத்தில் தமிழ் அடைந்திருந்த சிறப்பினுக்கு எடுத்துக்காட்டா யமைந்துள்ளவை இவ்விரு பாடல்களுமே. இயற்றமிழே யன்றி இசைத்தமிழும், நாடகத் தமிழும் வளர்ச்சியுற்றன. பொருநன் மன்னனைத் தடாரி வாசித்துத் துயிலெழுப்புவான். யாழ், துடி, பாண் முதலிய வாச்சியங்களு மிருந்தன. மன்னன் செவியில் இன்னிசை கீதம் மட்டொழுகுவதுபோ லினிமை பயந்தது. "ஆறலை கள்வர் படைவிட அருளின்—மாறுவலைப் பெயர்க்கும் மருவின் பாலை"யை, "வாரியும் வடித்தும், உந்தியம், உறழ்ந்தும்" பொருநர் வாசித்திட அதனிசை யெங்கும் பரவியின்ப மூட்டியது. கரிகாலன் சிந்தை களிப்புற்றது.

இவ்வாறு களிறுபடு செங்களம் மருளுறக் கலக்கி, வெளிறுபடு நல் யாழின்னிசை நுகர்ந்து, ஆளுகையில் மேம்படச் சிறந்து, தமிழ்ச்சுவையறிந்து புலவரைப்போற் புலவர் பாடும் புகழுடையோனாய்க் கரிகாலன் அரசு புரிந்த கரிகாலன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு எனவும், ஐந்தாம் நூற்றாண்டு எனவும் கூறுவர்.



# பாரதி சித்திரம்

## கண்ணன்—என் ஆண்டான்

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

காலை வேளை. வட மதுரையம்பதியிலே செங்கோல் செலுத்தும் மன்னர் மன்னனாகிய கண்ணபிரான், தனது திருமாளிகையின் தெருப்புறத்திலுள்ள திண்ணையின்மீது கம்பீரமாக அமர்ந்துகொண்டிருக்கிறான். அப்பெருமானெதிரில் சற்று தூரத்தில், முழங்காலளவு சிறு துண்டொன்றை இடையில் உடுத்தி வலது கையில் நீண்டதொரு தடியைப் பிடித்துக்கொண்டு கரிய மேனியுடைய ஒருவன் மிகுந்த அடக்க ஒடுக்கத்துடன் கூடியவனாக நின்றுகொண்டிருக்கிறான். கண்ணபிரான் அவனைக் கருணை ததும்பும் கண்களுடன் நோக்கிய வண்ணமே, "என்ன சமாசாரம்? எங்கு வந்தாய்?"—என்று அன்பு நிறைந்த குரலில் வினவுகிறார். அவ்வெளியவன் கண்ணபிரானை நோக்கிப் பின்வருமாறு பேசத் தொடங்குகிறான்:—

"தஞ்சம் உலகினில் எங்கணும் இன்றித்
தவித்துத் தடுமாறி
பஞ்சைப் பறையன் அடிமை புகுந்தேன்,
பாரம் உனக்கு ஆண்டே!
—ஆண்டே! பாரம் உனக்(கு) ஆண்டே!"

ஆண்டே! கும்பிடுகிறேன் சாமீ! இந்த உலகத்திலே, இது வரையில் நானும் எங்கெங்கேயோ திரிந்து அலுத்துவிட்டேன். என்னைக் கண்டவுடன் எல்லோரும் வெறுத்துத் துரத்துகிறார்களேயன்றி, என்னிடம் சிறிதேனும் மனம் இரங்கி என்னை ஆதரிக்கக்கூடியவர்கள் எவரையுமே காணோம். ஐயனே! கெஞ்சிக் கும்பிட்டுக் கூத்தாடி நின்றாலும், என்னிடம் எவருமே அன்பு காட்ட மனம் இரங்கவில்லை, ஆண்டவனே! அதற்குப் பதிலாக அவர்கள் கூறிய கொடிய வசைமொழிகளைக் கேட்டுப் பெரிதும் தவித்து செய்வகையறியாது நெஞ்சம் பெரிதும் தடுமாறிக் கலங்கிநின்ற நான், முடிவில் உங்களது கீர்த்தியைக் கேள்வியுற்று இங்கு வந்து சேர்ந்தேன். ஆண்டே! ஆதரிப்பாரின்றி நிர்க்கதியாக நிற்கும் பஞ்சைப் பறையனாகிய நான், உங்களிடம் அடிமைத் தொழில் செய்து பிழைக்கலாமென்ற ஆவலினால் பெரிதும் தூண்டப்பட்டவனாய் உங்களிடம் அடைக்கலமாக வந்து நிற்கிறேன். சாமி! இனிமேல் இந்த ஏழைப் பறையனை ஆதரித்துக் காக்கும் கடமை உங்களுடையதே!

ஆண்டே! இதுவரையிலும் எனது வாழ்க்கையிலே நான் வறுமைப் பேயின் கொடுமையினால் அனுபவித்து வந்திருக்கும் கொடுந் துன்பங்களைக் கணக்கிட முடியாது. உள்ளத்தை வாட்டும் பலவகைப்பட்ட கவலைகளும் உடலைத் துன்புறுத்தும் பலதிறப்பட்ட நோய்களும் உள்ளத்தையும் உடலை

யும் ஒருங்கே துன்புறுத்தும் வறுமைப்பேயின் கொடுஞ் செயல்களும் எக்காலத்திலும் என்னைப் பற்றிக்கொண்டு, உயிருடன் சித்திரவதை செய்துவருகின்றன. அதன் பயனாக, காலையில் தூக்கத்தினின்றும் விழித்தெழுந்தது முதல் இரவில் படுக்கைக்குப் போகும் வரையில், பலவகைப்பட்ட கொடுந் துன்பங்கள் என்னைச் சூழ்ந்துகொண்டு எனது உள்ளத்தையும் உடலையும் ஒருங்கே துன்புறுத்துகின்றன. இந்த ஏழையின் மீது இரக்கங்கொண்டு, அத்துன்பங்களையெல்லாம் தீர்த்து என்றும் குறையாத—என்றும் சலிக்காத—என்றும் நிலைத்து நிற்கக்கூடிய உண்மைச் சுகத்தை எனக்கு அருள் செய்ய வேண்டும். ஐயனே! தாங்கள் என்னிடம் கருணை கொண்டு நான் படும் கொடுந்துன்பங்களைத் தீர்த்தருளத் திருவுள்ளம் இரங்கியருள்வீர்களானால், தங்களது அருட்பெரும் புகழை வாயாரப் பாடி வாழ்த்தி கவலையை மறந்து களிக்கூத்தாடி, தாங்கள் விதிக்கும் ஆணை வழியே சிறிதும் தவறாமல் நடந்துகொள்வேன்.

ஆண்டே! பஞ்சைப் பறையன் புகழ்வதால் என்ன பயனென்று தாங்கள் மனத்தில் நினைத்துக்கொண்டு விடாதீர்கள்! நாங்கள் எல்லோரும் சொற்ப உபகாரத்தைப் பேருபகாரமாக மதித்து மனத்தில் நன்றாகப் பதிய வைத்துக்கொண்டு, என்றென்றும் செய்ந்நன்றி மறவாமல் சிறிதும் சலிப்பின்றி உழைக்கக்கூடியவர்களென்பதைத் தாங்கள் உறுதியாக நம்பலாம். தாங்கள் என்னை அடிமை கொண்டு ஆதரிப்பதாக வாக்களித்தால், தங்களது அருட்பெரும் புகழை எங்கள் சேரி முழுவதிலும் பறையடித்து முழக்கி, தங்களது அருட்பெருங் குணங்களை வாயார வாழ்த்திப் பாடி மகிழ்வேன்; நாற்புறமும் கிடுகிடென்று அதிரும்படியாக பேரிகை அடித்துத் தங்களது திருநாமம் எங்கும் பரவும்படி முழக்கி ஆனந்திப்பேன். அஞ்ஞானத்தில் ஆழ்ந்து கிடக்கும் பேதைகளாகிய எனது சகோதரர்களுக்கும் தங்களது ஒப்புயர்வற்ற தனிப்பெருங் கருணையை நன்கு உணர்த்தி, அவர்களையும் தங்களுக்கே அடிமைப்படுத்திவைத்து ஆனந்திக்கும் தனிப்பெரும்பேற்றை எனக்கு வாய்க்கச் செய்தருள, தாங்கள் திருவுள்ளம் இரங்கியருளவேண்டும்.

ஆண்டே! சேரியிலும் வயல்களிலும் எங்கள் சாதியார் கூட்டங்கூட்டமாகக் கூடிப் பேசிக்கொண்டிருக்கும்போது என்னைக் காண்பார்களாயின், "அவன் போன சென்மத்திலே ரொம்பப் புண்ணியம் பண்ணியிருப்பான். அவன் கை மேலே ஓங்கிப் போயிடுச்சி. அவனுக்குப் படியளக்கிற ஆண்டை, நம்ம ஆண்டைமார் மாதிரி நெஞ்சிலே இரக்கமில்லாதவரா என்ன? கண்ணபிரானுக்கு வேலை செய்யற பண்ணையாளென்கிற சிறப்பு சாமான்யமா என்ன? அவன் பண்ண பாக்கியமே பாக்கியம்!"—என்று என்னைக் குறிப்பிட்டுச் சிறப்பாகப் பேசவேண்டுமென்னும் ஆசைமிகுதியினாலே, இப்பொழுது தங்களிடம் வந்து நிற்கிறேன். அப்படிப்பட்ட பாக்கியம் மாத்திரம் எனக்குக் கிடைத்துவிட்டால், அப்புறம் இந்த உலகத்திலே, எனக்கு வேறு என்ன வேண்டும்?

ஐயனே! ஆளைப் பார்த்தால் ஒல்லியாக இருக்கிறானே, இவனால் என்ன வேலை செய்யமுடியுமென்று எண்ணிவிடாதீர்கள்! உங்கள் கழனிகளிலே என்னைக் காவல் வைத்துப் பாருங்கள்; அப்பொழுது தெரியும் என் சாமர்த்தியம். இரவிலும் பகலிலும் சிறிதும் சலியாமல் கழனிகளைச் சுற்றிச் சுற்றி வந்து பயிரைத் தின்னவரும் பறவைகள் மாடுகள் முதலியவற்றை கழனிக்

குள் நுழைய வொட்டாதபடி தடுத்து வெருட்டி, எவ்வளவு எச்சரிக்கையுடன் காவல் காப்பே னென்பதை, நீங்கள் கண்ணாரக் கண்டே தெரிந்து கொள்ளவேண்டும். பயிர்காக்கும் வேலையை எனக்குக் கொடுக்க உங்களுக்கு மனமில்லாவிட்டாலும், உங்களுக்கு மிகவும் பிரியமான பசுக்களை மேய்த்து வரும் வேலையையேனும் கொடுத்துப் பாருங்கள். அதற்கும் மனமில்லாவிட்டால், கழனிகளில் ஏர் உழுவது—களை பிடுங்குவது—தண்ணீர் பாய்ச்சுவது முதலிய வேலைகளையாவது கொடுத்துப் பாருங்கள். மற்றவர்களைக் காட்டிலும் நான் கழனிகளில் எவ்வளவு சிரத்தையுடனும் எவ்வளவு உற்சாகத்துடனும் பாடு படுவே னென்பதைக் கண்ணாரக் கண்டறிந்து கொண்ட பின்பு, நான் தாங்கள் கட்டளையிடும் வேலைகளைச் செம்மையாகச் செய்யத் தகுதி உடையவன்தானா என்பதைத் தெரிவியுங்கள். நிலங்களில் செய்யவேண்டிய வேலைகளை என்னிடம் ஒப்படைக்கத் தங்களுக்கு மனமில்லாவிட்டாலும், தங்கள் வீட்டின் பின்புறத்திலுள்ள தோட்டங்களைக் கொத்திப் பதப்படுத்தி காய்கறிச் செடிகளை வளர்க்கச் செய்வித்து, எனது கைத்திறமையையும் சலியாத உழைப்பையும் சோதனை செய்து பாருங்கள். அப்பொழுது தங்களுக்குத் தெரியும், நான் எப்படிப்பட்ட உழைப்பாள னென்னும் உண்மை! அது மட்டுமா! வானத்தைக் கவனித்துப் பார்த்தும் வேறு சில குறிகளைக் கவனித்தும் எப்பொழுது மழை வருமென்பதைக்கூட, நான் திட்டமாகத் தெரிந்து சொல்லிவிடுவேனே! அந்த வித்தையில் எனக்கு நீண்டகாலப் பழக்கம் உண்டு ஐயனே! எப்பொழுதாவது நான் சொல்லும் மழைக்குறி தப்பிவிடுமானால், என்னை மரத்துடன் சேர்த்துக் கட்டி அடிக்கச் செய்யுங்கள்.

ஆண்டே! நான் ஒண்டி மனிதனல்ல; ஆண்டவனருளால், எனக்கு ஒரு மனைவியும் ஆறு குழந்தைகளும் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் என்னொருவனையே முற்றிலும் நம்பியிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் வெளியிற் சென்று பாடுபட்டுச் சம்பாதித்து வந்தால்தான், என் குடிசையில் அடுப்பு எரியும். ஒருநாளாவது நான் வேலை செய்யாமல் குடிசையிலேயே தங்கியிருந்துவிட்டால், நானும் என்னையே நம்பி நிற்கும் மற்றவர்களும் பட்டினி கிடந்து துடிக்கவேண்டியதைத் தவிர வேறு வழி இல்லை. ஆதலால், அவர்க ளெல்லோரும் ஒரு வேளையாவது வயிறாரக் கஞ்சி குடிக்கவேண்டுமானால், நான் ஒவ்வொரு நாளும் வெளியிற் சென்று எப்படியாவது பாடுபட்டுச் சம்பாதித்தாகவேண்டும். என்னைச் சேர்ந்த பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றுவதோடு மட்டும், என் மனம் திருப்தி அடைந்துவிடுவதில்லை. பரோபகாரம் செய்யாத ஒருவன்—அண்டை அயலாருக்குத் தன்னால் இயன்ற உபகாரத்தைச் செய்ய மனம் இரங்காத ஒருவன்—இந்த உலகத்தில் உயிர் வாழ்வதில் என்ன பலன்? கேவலம் தெருவில் திரியும் நாயும் பன்றியுங்கூட, தாமும் சாப்பிட்டுத் தங்களது குட்டிகளையும் காப்பாற்றுகின்றன. பகுத்தறிவிற் சிறந்த மனிதனாகப் பிறந்தும் பரோபகாரம் செய்யாமல் தன்னலம் ஒன்றிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பவன், மிருகத்தைக் காட்டிலும் இழிந்தவனல்லவா? ஆதலால், என்னை நம்பி நிற்கும் எனது பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றுவது மட்டுமன்றி, அண்டை அயலாருக்கும் என்னால் சாத்தியமான உபகாரங்களை நான் செய்தாகவேண்டும். இந்த எனது நோக்கம், தங்களது அன்பு மிகுந்த உதவியினாலும் ஆசீர்வாதத்தினாலுமே நிறைவேறவேண்டியிருக்கிறது.

ஐயனே! பஞ்சைப் பறையன் என்னென்னமோ திட்டம் போடுகி

ரூனே, நம்மிடமிருந்து தந்திரமாகப் பணம் பறிக்க முயல்கிறுனே என்று தங்களது திருவுள்ளத்திலே நினைத்துக்கொண்டுவிடாதீர்கள்! பகல் முழுதும் வயலில் வேலை செய்து இரவில் குடிசையில் படுப்பவனுகிய எனக்கு, படாத பாடு படுத்திவைக்கும் பாழும் பணம் எதற்காக?

"தேவரீர்—
ஆதரித்தால் போதும் அடியேனை; நெஞ்சிலுள்ள
காதல் பெரி(து) எனக்கு; காசு பெரிதில்லை!"

படாத பாடுபட்டுப் பணத்தைச் சேர்த்து வைத்துப் பார்த்து மகிழவேண்டுமென்னும் பைத்தியம் எனக்குச் சிறிதும் இல்லை; நான் எப்பொழுதும் அப்படிப்பட்ட மனக்கோட்டைகள் கட்டியதில்லை. பசித்தபோது மற்றவர்களிடம் சென்று நின்று பல்லைக் காட்டிப் பிச்சை கேட்டு வாங்கி வயிறுவளர்க்க என் மனம் சிறிதும் துணியாது; பிச்சை வாங்கிப் பிழைப்பதைவிட உயிரை விட்டுவிடுவது மேலென்பது எனது எண்ணம். இந்த பரந்த உலகத்திலே, எனக்கு வேண்டியவை எவை? பசித்தபோது, அப்பசி அடங்க நாழிச்சோறு; மானத்தை மறைத்துக் காப்பாற்ற, ஒரு நாலு முழத் துணி. தங்களையே தஞ்சமடைந்து, தாங்கள் காலாலிட்ட வேலையைத் தலையால் செய்யச் சித்தமாக நிற்கும் இந்த பஞ்சைப் பறையனுக்கு, அவ்விரண்டும் கொடுத்துதவுவது தங்களுக்கு ஒரு பொருட்டா என்ன? ஆனுல், ஐயனே! வருஷத்தில் இருமுறை தாங்கள் எனக்குத் துணி எடுத்துக் கொடுக்கும்போது, என்னை நம்பி நிற்கும் எனது பெண்டு பிள்ளைகளுக்காக—'தர்மத்திற்காக'—நாலைந்து துணிகள் வாங்கித் தரவும் தாங்கள் திருவுள்ளம் இரங்கியருளவேண்டும். தாங்கள் வழங்கிய தானத்தை, ஒவ்வொருநாளும் அவர்கள் மனம் குளிரப் புகழ்ந்து வாயார வாழ்த்தவேண்டும்.

ஆண்டவனே! ஒன்பது வாசல்களுடைய எளிய குடிசிலைப் போன்ற இவ்வுடலை, கோபம்-மோகம்-அகங்காரம் முதலிய பேய்கள் சுற்றிச் சுற்றி வந்து குதித்துக் கூத்தாடுகின்றனவே! அப்பேய்களினுல் என் மனம் அனுபவிக்கும் கொடுந் துன்பத்தை, இன்னும் என்னுல் எவ்வளவு காலம் சகித்துக் கொண்டிருக்க முடியும்? இம்மண்ணுலகில் எண்ணிறந்தவர்களைத் தாம் விரும்பிய வண்ணமெல்லாம் ஆட்டிவைத்துவரும் அக்கொடிய பேய்களின் சேஷ்டைகளை நினைக்கும்போதே, என் மனம் பெரிதும் குமுறுகிறதே! அவற்றின் அகங்காரத்தை அடக்கி ஆளக்கூடிய சக்தி, எளியவனுகிய எனக்கு உண்டோ? தாங்கள் மனம் இரங்கி மந்திரம் செய்து அவற்றின் துடுக்கடக்கி, என்னைச் சூழ்ந்து துன்புறுத்தும் எல்லாவகைப்பட்ட பகைகளையும் தொலைத்தருளவேண்டும். ஐயனே! எவருக்கும் அடங்காமல் திரிந்துகொண்டிருந்த மிகமிகக் கொடிய அரக்கர்கள் பலரை எளிதில் வதைத்தருளிய வீரநாயகனே! அடியேனிடம் தாங்கள் திருவுள்ளம் இரங்கினுல், அக்கொடிய பேய்கள் என்னை நெருங்கத் துணியுமோ?

"பேயும் பிசாசும் திருடரும் என்றன்
பெயரினைக் கேட்டளவில்,
வாயும் கையும் கட்டி அஞ்சி நடக்க
வழி செய்யவேண்டும் ஐயே!—தொல்லை தீரும்
வழி செய்ய வேண்டும் ஐயே!"

ஆண்டே! கொடிய தீவினைப் பயனுக இம்மண்ணுலகில் அமைதி

# மாதர் உலகம்



## ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"நிலையிற் பிரியேல்"

என்பது அடுத்த நீதி. இதற்கு நீ நிற்கின்ற உயர்ந்த நிலையி லிருந்து ஒரு போதும் நீங்காதே என்பது பொருள்.

பெருமிதமான நிலையில் இருப்பவர்களும் அத்தகுதிக்கு ஒவ்வாத குற்றங்களை (ஆசையை அடக்க முடியாமல்) செய்து இழிவெய்துவர். அதனால் உலகில் அன்னோர் என்றும் அழிக்க முடியாத பழியைப் பெற்று அல்லல் உழந்து வருந்துவர். தவறான வழிகளில் செல்லும் மனதை அடக்கி ஆளுவதே ஆண்மையாகுமன்றிப் பிற உடல் வன்மையாற்பெறும் எவ்வித ஆண்மையும் வீரமாகாது.

கடுந்தவம் பலகாலம் புரிந்து பிரம்மசிருஷ்டிக்குப் பிரதி சிருஷ்டி புரியும் ஆற்றல்படைத்த விசுவாமித்திரர் மேனகையைக் கண்டு காதலுற்றுக் கண்ணியம் இழந்தார். காசிபர் மாயையைக் கண்டு தனது நிலைதவறி அனைத்தையும் மறந்து சூரனாதி அசுரரைத் தோற்றுவித்தார். க்ஷத்திரிய குலத்திற் பிறந்த பீஷ்மரோ எழுநூறு வருடங்கள் அரச போகத்திலிருந்தும் மூவரும் தேவரு

---

இழந்து பலவிடங்களிலும் திரிந்துகொண்டிருக்கும் பாபாத்மாக்களாகிய பேய்களும் பிசாசுகளும், பாவத்திற்குச் சிறிதும் பயப்படாமல் திருட்டுத் தொழிலையே தங்களது ஜீவனோபாயமாகக் கொண்டு இரவில் திரியும் திருடர்களும், என் பெயரைக் கேட்டவளவிலேயே பெரிதும் அஞ்சி நடுங்கி வாய் பொத்திக் கைகட்டி நான் ஏவியவாறு நடக்கும்படி தாங்கள்தான் ஒரு வழி செய்யவேண்டும். அந்த கொடிய பாபாத்மாக்களையும் சீர்திருத்தி நல்வழியில் திருப்பி நடக்கச் செய்விக்கக்கூடிய சக்தியை, தாங்கள்தான் எனக்கு அளித்தருள வேண்டும். அவர்களால் இவ்வுலகத்தினருக்கு ஏற்படும் தொல்லைகளை இனியேனும் ஒழித்தருளத் தாங்கள்தான் திருவுள்ளம் இரங்கியருள வேண்டும். ஆணவம் மிகுந்த கொடியவர்களைத் தண்டித்து அன்பு மிகுந்த மெய்யடியவர்களைக் காத்தருள்வதே தங்களது கடமை என்பதை, பஞ்சைப் பறையனாகிய அடியேன் தங்களுக்கு ஞாபகப்படுத்தவும் வேண்டுமோ? தாங்கள் மட்டும் திருவுள்ளம் கொண்டுவிட்டால், இப்பாரதநாடு கூடிய விரைவில் தனது பழம் பெருஞ்சிறப்பை மீண்டும் அடையக்கூடு மென்பதில் ஐயமும் உண்டோ?"

முடிதுளக்குமாறு மனதாலும் மாசுறாது ஒப்பற்ற பிரமசாரியாக விருந்து புகழ்பெற்றார். பஞ்ச கன்னிகைகளில் சேர்ந்த அகல்யா தனது உயிரினும் சிறந்த கற்பைக்காக்கும் மனவுறுதி யில்லாமல் முக்கண் மூர்த்திக்கு இணையான தனது கணவராகிய கௌதம முனிவரால் கருங்கல்லாகச் சபிக்கப்பட்டாள்.

முன் கூட்டி யுணர்ந்து தவறிழைத்தவள் அல்லளாயினும், உணர்ந்த பின்னர் முனியாமல் இசைந்திருந்தா ளென்பதைக் கவிச் சக்கிரவர்த்தி, விளக்கமாக,

"தையலாள் நயனவேலும் மன்மதன் சரமும்பாய
உய்யலாம் உறுதிநாடி யுழல்பவன் ஒருநாள்உற்ற
மையலால் அறிவுநீங்கி மாமுனிக் கற்றம்செய்து
பொய்யிலா வுள்ளத்தான்றன் உருவமே கொண்டுபுக்கான்
புக்கவளோ டுங்காமப் புதுமண மதுவின்தேறல்
ஒக்கவுண் டிருத்தலோடு முணர்ந்தனள் உணர்ந்தபின்னும்
தக்கதன் றென்னவோரான் தாழ்த்தனள் இருப்பத்தாழா
முக்கணான் அனையவாற்றல் முனிவனு முடுகிவந்தான்".

என்ற செய்யுள்களாற் காட்டியுள்ளார்.

பூரண குற்றவாளியாக மதிக்கமுடியாத அந்த அகலிகை முனிவர் கோபத்தால் எந்தக் கருங்கல்லாகச் சபிக்கப்பட்டாளோ அந்தக் கருங்கல்லின் குறிப்பாக இன்றும் விவாகச் சடங்கில் அம்மி மிதித்தல் என்பது அநுஷ்டிக்கப்படுகிறது கண்கூடு. விபசாரத்தைக் காலால் மிதிக்கின்றேன்என ஒவ்வொரு மணப்பெண்ணும் அம்மியை மிதிக்கும்படி செய்வதற்கு அகல்யாவின் செயல் உதாரணமாகியதை நோக்குவோமாயின் அன்னையார் அருளிய நிலையிற் பிரியேல் என்பது எத்துணை இன்றியமையாதென்பது புலனாகும்.

இதனை நன்றாக நெஞ்சிற்படும்படி நமது தெய்வப் புலவர் வெகு பொருத்தமாக,

"தலையி னிழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை".

என்றருளிச் செய்தார்.

எல்லா அவயவங்கட்கும் அழகை அளிப்பது கேசம். அதனைப் போற்றாத கலைவாணர்க ளில்லை. அத்துணைச் சீரும் சிறப்பும் வாய்ந்து கண்கவர் வனப்புடைய கேசத்தில் ஒரு மயிர் தலையிலிருந்து வேறுபட்டால் அதை இழிவாக ஒதுக்கித் தள்ளுதல் உலகியல்பு. இந்த உதாரணத்தையே நிலையிற் பிரிந்தவர்களின் நிலைக்கு ஒப்பிடப்பட்டிருக்க வேறு உதாரணங்கள் வேண்டற்பாலதன்று. நிலையிற் பிரிதல் என்பது ஒழுக்கத்தவறு ஒன்றில் மட்டில் நிகழ்வதன்று. எந்தவித அற்பத்தனமான ஆசைகளும் உறுதியற்ற மனமுடைய மனிதனை உயர் நிலையினின்றும் இழிநிலையில் இறக்கிவிடுவது கண் கூடு. இதற்கு எத்தனை எத்தனை உதாரணங்களோ காணலாம் ஆதலின்; ஒவ்வொருவரும் தனது மேல் நிலையைக் காத்துக் கொள்ளச் சிறிதும் பின்வாங்குதல் கூடாது.

ஆசைப்படும் மனதை அடக்கி வசப்படுத்தப் பழகவேண்டும். எவற்றிலும் உயர்ந்தது மதிப்பு. அதற்குத் தாழ்வு நேரில் உயிர் வாழாமையே சிறந்ததென் பது ஔவையாரின் துணிபு. மானம் பட வரின் வாழாமை முன்னினிதே என்ற நல்லுரையே இதற்குச் சான்றாகும். இனி,

"நீர் விளையாடேல்"

என்னும் நீதித்தொடர். இதற்கு ஆழமுள்ள தண்ணீரில் நீந்தி ஒருபோதும் விளையாடாதே என்று பொருள். இளைஞர்களும் சில முரடர்களும இவ்விஷயத்தில் பந்தயம் கட்டியும் போட்டி விளையாட்டுச் செய்வதுண்டு. கெலிப்பது முண்டு. நீரில் மூழ்கி இறப்பது முண்டு. நன்றாகத் தெரிந்த நீச்சில் வல்லவர்களும் சில சமயம் கைசோர்ந்து அபாயத்திற் குள்ளாதல் வியப்பன்று. இயற்கையின் வன்மையை மனிதன் எதிர்க்க எண்ணுவது மடமையேயாகும். ஐம்பூதங்களிலும் இயல்பாக நிலவி நின்று உயிர் வாழ்தற்கு அவ்வப்பூதங்களின் மாத்திரை மிகுதியாகப் பிறப்பில் அமைந்துள்ள உயிர்ப் பிராணிகளுக்கே முடியும். பிருதிவி மாத்திரை அதிகமுள்ள மனிதர்கள் மண்ணில்தான் நிற்கவும் இருக்கவும் உலவவும் உறங்கவு முடியும். அப்புமாத்திரை குறைந்துள்ள நாம் அந்நீரில் மூழ்கி அபாயமின்றி யிருக்கமுடியாது. அப்புவில் வாழும் பிராணிகளெல்லாம் அப்புமாத்திரை அதிக மிருப்பதால் அத்தண்ணீரின் ஆழத்தில் இயல்பாக உண்டு உறங்கி யுலவிக் கருத்தரித்து பல்கிப் பெருகி வாழ முடிகிறது. மனிதன் அந் நீர் வாழ் பிராணிகளைவிட எத்தனையோ மடங்கு அறிவும் உடல் உரமும் படைத்தவன்தான். ஆயினும் அச்சிறிய ஜெந்து செய்யும் செயலை இவனால் நினைக்கவு முடியாது. இதுதான் இயற்கை வன்மை. கடவுள் அருள். அவன் சர்வவல்லமை யுடையவன். முத்தொழிலும் இச்சாமாத்திரத்தில் நடைபெறச் செய்யும் ஆற்றல் ஈசனுடையதே. ஆதலினால் இயற்கை வன்மையை எதிர்த்து வெற்றிபெற முற்படுவது பெரும் பேதமை யாகும். நெருங்கினாற் சுடும் நெருப்பு. அந்நெருப்பை அப்படியே தனக்கு உணவாக எடுத்து விழுங்கி வாழும் ஒரு பிராணியும் உண்டு; அதை நெருப்புக் கோழி யென்று கூறுவர். அதுபற்றி நமது மூதாட்டியார்,

"நீர் விளையாடேல்"

என்று புகட்டியுள்ளார். ஜலஸ்தம்பனம் செய்யும் ஆற்றல் படைத்தவர்களும் உண்டு. அன்னார் யோகாப்பியாஸத்தில் தேர்ச்சி பெற்றும், சித்தி, கைகூடப் பெற்றும் செயற்கரும் செய்கைகள் பலவும் செய்வர். அவர் மனித சக்திக்கு மேம்பட்டவர்கள். அவர்களை உதாரணமாக் கொள்ளுதல் கூடாது. மூதாட்டியாரும் பருவமுள்ள சிறுவரை நோக்கி இது கூறியருளினர். இனி,

"நுண்மை நுகரேல்"

என்பது. இதற்கு நோயைத்தரும் சிற்றுண்டிகளை நீ உட்கொள்ளாதே என்பது பொருள். இம்மொழி பொன்மொழி. சிற்றுண்டிச் சாலைகள் நம் நகரங்களில் எவ்வளவு அதிகரித்திருக்கின்றனவோ அவ்வளவு நோயாளிகளின் சிகிச்சைக் கூடங்களும் பெருகிவிட்டன வென்பது தெளிந்த உண்மை. சிற்றுண்டி யுண்ணும் இயற்கை யுடையோர் ஒருநாளும் ஆரோக்கியமாக வாழ முடியாது. பெரும்பாலும் சுவைப்பித்தினால் சிற்றுண்டிகளை வரையறையின்றிக் கிடைத்தபோ தெல்லாம் உண்பதேயன்றிப் பசியினால் அன்றென்பதை அக்கூட்டத்தினரே மறுக்க விரும்பார்.

காலையில் வேண்டியமட்டும் அரிசிமாவிலும் உழுந்துமாவிலும் செய்யப்பட்ட பலகாரங்களை வஞ்சனையில்லாமல் சாப்பிட்டு மூச்சுத் திணறி ஏப்பம் விட்டுக்கொண்டே வெளிவருவோர்களை என்ன செய்தீர்களென்று கேட்டால் தாகத்திற்கு சாப்பிட்டேன் என்று பதில் சொல்கிறார்கள். தாகத்திற்குச் சாப்பிடுவதென்பது எப்போதும் நீரும் மோருந்தான். ஆனால் டஜன் கணக்கில் இட்டலி தோசை முதலிய மஸ்துள்ள இன்னும் பல ஆகாரங்களை உட்கொள்வோர்களும் தாகத்திற்குச் சாப்பிட்டதாகச் சொல்வது ஏதோ வழக்கத்தை யொட்டிய வார்த்தையாகவே மதிக்கப்படுகிறது. ஒரு போது யோகி என நம் நாட்டில் தொன்மையாகஒரு பழமொழி வழங்கி வருகிறது. ஆனால் நம்நாட்டில் தற்காலம் மணிக்கொரு ஆகாரம் உட்கொள்ளுவது சாதாரண தர்மமாகிவிட்டது. அநேகமாய்ப் பசியின் அருமை இன்னதென உணரச் சந்தர்ப்பம் வாய்க்காத பலர் நம்மிடை யிருக்கின்றனர். அதனால் ஆகாசம் இன்பமற்று அஜீரணம் அன்ன துவேஷம் மலச்சிக்கல் இவைகள் ஆட்சி செலுத்தி வருகின்றன. நம்முன்னோர்,

"பாலுண்போம் எண்ணெய் பெறின்
வெந்நீரிற் குளிப்போம்
பகற்றுயிலோம் பகற்புணரோம்
பயோதர மூமூத்த
ஏலஞ்சேர் குழலியரோ டிளவெயி
லும் விரும்போம்
மூலஞ்சேர் கறிநுகரோ
மூத்ததயிர் உண்போம்
முன்னாளிற் சமைத்த கறியமு
தெனினும் விரும்போம்
ஞாலந்தான் கிடைத்திடினும் பசித்
தொழிய உண்ணோம்
சமனார்க் கிங்கேது கவை
நாமிருக்கு மிடத்தே."

இதில் மூலஞ்சேர் கறிநுகரோம்; மூத்த தயிர் உண்போம்; ஞாலந்தான் கிடைத்திடினும் பசித்தொழிய உண்ணோம் என்பவைகளை நன்கு சிந்தித்து அதன்படி செய்ய முற்படல்வேண்டும்.

உஷ்ணத்தை மிகுதிப்படுத்தும் பதார்த்தங்களைப் புசித்தல் கூடாது. புளித்த தயிர்தான் எவ்வித ஆகாரங்களையும் ஜீரணிக்கச் செய்ய வல்லது. புளியாத தயிர் சுவையாயினும் அதற்கு மேலே கூறிய ஜீரணம் செய்விக்கும் வன்மையில்லை. ஆதலினாலேயே மூத்ததயிர் உண்போம் என்றார். இதிலும் "நீர் சுருக்கி மோர் பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர் தம் பேருரைக்கிற் போமே பிணி என்ற மூதுரையும் கவனிக்கத்தக்கது. இதனால் அந்தப் புளித்த தயிரையும் மோராகப் பெருக்கி யுண்ணல் விசேஷமென்று விளங்குகிறது. இனி ஞாலந்தான் கிடைத்திடினும் பசித்தொழிய வுண்ணோம் என்பது எல்லாவற்றிலும்

சிறந்த உபதேசம். முன்னுண்ட உணவுகள் நன்ருக ஜீரணித்தமை யுணர்ந்து ஒன்றினுக்கொன்று மாறுபடாத வகையில் தெரிந்து நல்ல பசியெழுந்த பின்பு உண்ணல்வேண்டும் என்னும் பொருள்பட நமது தெய்வப் புலவர்,

"அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து."

என்றருளிச் செய்தார். மாறல்ல என்பதை உடலுக்கு மாறல்லாதவைகள், காலத்திற்கு மாறல்லாதவைகள், தம்முள் மாறல்லாதவைகள் என மூவகைகளி லும் ஆராய்தல்வேண்டும்.

உதாரணமாகக் காலையில் ஏற்கும் உணவு இலேசானதாகவும் பகற்போஜ னம் சிறப்புள்ளதாகவும் இராப்புசிப்பு விரைவில் ஜீரணமாகக் கூடியதாகவும் இருத்தல் வேண்டுமென்பதை எவரும் உணர்வார். சூரியனொளி குன்ருதிருக் கையில் ஏற்கும் உணவு ஜீரணிப்பதுபோல சூரிய வெப்பம் இல்லாத குளிர்ந்த இரவுக் காலங்களில் உண்ணும் உண்டி ஜீரணியாது. அதிகாலையில் ஏற்கும் உணவு மஸ்துள்ளதாயின் புத்தியை மந்தப்படுத்தி பகற்போஜனத்திலும் ஆர் வத்தையும் நல்ல பசியையும் கெடுக்கும். இதுபோலவே இராப்போஜன விதி யில்,

"இஞ்சி நெல்லி இலேக்கறி பாகற்காய்
கஞ்சி வெண்டயிர் கங்குல் அருந்திடில்
பொன்செய் பூமகள் போயுடன் மூத்தவள்
கொஞ்சிக் கொஞ்சிக் குலாவி நடிப்பளே."

என்ற செய்யுளும் வழக்கில் உள்ளது. தினசரி காலபேதங்கள் மட்டிலன்றி மாரிக் காலம் பனிக்காலம் கோடைக்காலம் இந்தக் காலங்களுக் கேற்றபடி உண்ணும் பொருள்கள் மாறுபட்டிருக்க வேண்டியதும் அவசியம்.

இதுபோன்று உணவில் மாறுபட்ட குணங்கள் உடைய பதார்த்தங்களை யும் கவனித்தல் வேண்டும். உதாரணமாகப் பாலே விருந்துதான் தயிர் தயா ரிக்கப்படுகிறது. ஆனல் பாலேயும் தயிரையும் ஏககாலத்தில் பருகலாமா? அவ் வாறு பருகுவதால் கேடுவரு மென்பதை சாதாரணமாக ஏதுமறியாத பாமரரு முணர்வர். தவிர நெய்யும் தேனும் தனித்தனி சிறப்புடைய வஸ்துக்களே. எனினும் இரண்டும் ஒன்றுபடின் நஞ்சாகும் என்றனர் அறிஞர். ஆதலினல் மாறல்லாத உண்டியென்பது உடலுக்கு மாறல்லாதவை, காலத்திற்கு மாறல்லா தவை, தம்முள் மாறல்லாதவை என மூத்திறப்படக் கவனித்தல் வேண்டும்.

அப்படிப் புசிப்பதும் மிகுதியுமாகாது; குறைவதுமாகாது. பிறிதோரிடத் துப் பெருமாட்டியார் "மீதூண் விரும்பேல்" என்றருளியபடி அளவுக்கு மீறி யுண்பது கெடுதியை விளைவிப்பதுபோல அளவுக்குக் குறைந்த உண்டியும் உடலுக்கு மெலிவையும் பிணியையும் உண்டுபண்ணு மென்பதை "மிகினும் குறையினும் நோய் செய்யு" மென்னும் குறளினல் உணர்த்தியுள்ளார். பேருண்டி கொள்வோர்களுக்கே இத்தனை எச்சரிக்கைகள் வேண்டுமென் ருல் சிற்றுண்டியாளர்கட்குத் தீங்கு வளரக் காரணமும் வேண்டுமோ? சிலர் ஓயாமல் எதையாவது வாயிலிட்டு அடக்கையில்கூட மென்றுகொண்டே யிருப்பதைக் காண முடியும். அவர்கள் குடல் எப்போதும் காலியாக இருக்க

முடியாதன்றோ? கல்விக் களஞ்சியமாகிய ஸ்ரீஜத். லோகமானிய பாலகங்காதர திலகருக்கு இளமையிலேயே நுண்மை நுகரும் விருப்பம் இருந்ததில்லை. அதாவது சிற்றுண்டி அருந்துவதில்லை. அதனால் அவர் தக்ஷிணசாலைக் கலாசாலையில் கல்வி கற்குங்கால் மாணவர்கட்கு உண்டியுதவும் போஜன விடுதித் தலைவர்கள் இவருக்குச் சாப்பாடுபோட மறுத்தனர். அதற்குக்காரணம் சிற்றுண்டியுண்ணும் மாணவர்கள் மிகக் குறைந்த ஆகாரமே யுண்பதால் அவர்கட்கு இலாபம் அதிகரிப்பதியல்பு. நமது லோகமானியரோ சிறு தீனிகளை அருந்தாமல் பசித்திருந்து வந்ததால் அதிகமாகப் புசித்தனர். இதனால் போஜன விடுதி நிர்வாகிகள் இவருக்கு உணவளிக்க விரும்பவில்லை. இதனை,

"பல்வகை யுண்டியாற் பசியைப் போக்கியே
தில்லுண வருந்திடும் சிலரைப் போலிலா
தல்லிலும் பகலிலு மதிகவோ தனம்
நல்லவா றருந்துவர் நலிவு தீரவே"
"உண்டியை யுதவிடும் சாலை ஓம்புனர்
எண்டரும் இவர்க்குண வீதல் செய்தலாற்
கண்டில ரூதியம் கழறுந் தன்னலம்
கொண்டன ராதலால் அன்பு கூர்ந்திலார்"

என வரும் திலகர் மானியச் செய்யுள்களால் உணரலாம்.

நுண்மை நுகராமல் நாவடக்கம் செய்து மாணவராயிருந்த கட்டிளமைக் காலந்தொட்டு உடலை நல்வழியில் ஓம்பிய திலகர் பெருமானின் மூளை வன்மைக்கு இணையாக இந்நாள் வரையில இருந்தவர் எவரும் இல்லை யென்பது உலகறியும். காளிதாஸ மகாகவியின் கற்பனு சக்தி அவ்வளவையும் பிரதிபலிக்கும்படி வரையப்பட்ட காதம்பரியென்னும் காவியத்திற்குப் பத்தாம் ஆண்டில் தந்தையார் வியக்கும்படி பொருள்கூறிய அவரது கூரிய மதிவன்மைக்கு அவரது ஒழுங்கான உணவே முக்கிய காரணம் எனக் கூறுதல் மிகையாகாது. பசிக்காகப் புசித்தலும், அப்படி புசிக்கு முணவு உடல் நிலை, கால நிலை விரோதமின்மை, முதலிய கவனங்களுடையதா யிருப்பின் பிணிவாரா தொழியும். பிணிபடா திருப்பின் உடல் நலமும் மதிநலமும் சுறுசுறுப்பும் மிகுந்து வளர்ச்சிபெறும்; ஆதலினால் நமது பெருமாட்டியார், 'நுண்மை நுகரேல்' என்று சுருங்கக் கூறியருளினர். இனி

"நூல் பல கல்"

என்றார் பெரியார். சில முக்கிய நூல்கள் கற்றாலே போதுமென்பாரும் பலர். எல்லா நூல்களையும் கற்பதனால வரும் ஊதியம் யாதென வினவுவாருமுளர். தாம் படித்ததும் தமக்குப் பிடித்ததுமான ஒருநூலை மட்டில் கற்றால் போதும் மற்ற நூல்களைக் கற்பது வேண்டற்பால தன்றெனப் புறக்கணிப்பாரும் பலர். அவ்வித எண்ணங்கள் தவறென்பதும் அவற்றால் தீமை பலவிளையு மென்பதும் பெருமாட்டியார் கருத்து. ஒவ்வோர் நூலும் ஒவ்வோர் உண்மைகளைப் போதிக்கும். அற்பப் படிப்பாளிகளுக்கு ஒன்றற்கொன்று வேற்றுமையிருப்பதாகப்படும். நூல் பல கற்றாலன்றி வேற்றுமை யுணர்ச்சி மறைந்து ஒற்றுமைப் பண்பு தோன்றாது. நம்நாட்டில் இடைக்காலத்தில் விண்ணளாவ மலிந்து

வளர்ந்த சைவ வைணவச் சண்டைகளும் 'உன் கடவுள் சிறியது; என் தெய்வம் பெரி'தென்னும் அகம்பாவப் போர்களும் நூல் பல கல்லாத காரணத்தாலேயே விளைந்தன வென்பது ஊன்றி நோக்குவோர்க்கு விளங்கும். தத்தம் கொள்கைகளுக்குச் சாதகமான பல நூல்களையே தேடிக் கற்பது நூல் பல கற்பதாகாது. தமக்கு எதிரான கொள்கைகளுக்கு ஆதாரவான பல நூல்களையும் காய்தல் உவத்தல் இன்றிப் பயிலல் வேண்டும், "களவும் கற்றுமற"

என்றருளியதும் ஈண்டுக் கவனிக்கற் பாலதே. எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு" என்றனர் திருவள்ளுவனாரும். ஆதலின் நூல்கள் பலவுங் கற்றுணர்ந்த் தெளிவடைவதே நமது கடமையாகும். கல்லாமலே யறிவு மிக்குடையோம் என எண்ணுவோரும் உளர். இயற்கை யறிவில் மேம்பட்டோர் பலர் இருப்பதும் உண்மையே. எனினும் யோக்கியதா பத்திரம் பெறாத (ஸன்னது பெறாத) நியாயவாதக் கலையுணர்ந்தோர்கள் மன்றத்தில் ஏறி வாதாட முடியாததுபோல் இயற்கை யறிவுத்திறம் உடையோர் நுண்ணறிவு அறிஞர் குழுவில் ஏற்றுக் கொள்ளுவதற்கில்லை என்பதை நமது தெய்வப் புலவரும்,

"கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்" என விளக்கி யருளினார்.

ஆதலினால் பல திறப்பட்ட நூல்களையும் சகிப்புணர்ச்சியுடன் கற்று அக் கருத்துக்களை யுணர்தல் வேண்டுமென்ற கருத்தினை "நூல் பலகல்" என்னும் நீதித் தொடரால் வற்புறுத்தினர் மூதாட்டியார்.

---



# புராணப் புதையல்கள்

(V. சங்கரையர்.)

(ஆனந்தபோதினி 18-வது தொகுதி 10-வது பகுதி 735–736 பக்கங்களின் தொடர்ச்சி.)

## 1. தேவீ மஹாத்மியம்.

தேவியின் சரித்திரத்தைக் கூறும் இந்த தேவீ மாஹாத்மியம் சப்த சதீ என்றும் கூறப்படுகின்றது. இதில் மூன்று சரித்திரங்கள் அடங்கி யிருக்கின்றன. அவையாவன:—

பிரதம சரித்திரம்:—1-வது அத்தியாயத்திலும் மத்திம சரித்திரம்:—2, 3, 4, அத்தியாயங்களிலும், உத்தம சரித்திரம்:—5 முதல் 13 வரையிலுமுள்ள அத்தியாயங்களிலும் விவரிக்கப் பட்டிருக்கின்றன. இதில் உவாச 57-ம், அர்த்த சுலோகம் 108-ம் சுலோகம் 535-ம் ஆக 700 இருப்பதால் இதற்கு சப்தசதீ என்ற பெயர் வந்தது.

முதல் அத்தியாயமான உத்தம சரித்திரத்தில் மஹாவிஷ்ணு யோக நித்திரையி லிருக்கும்பொழுது அவருடைய கரணமலத்திலிருந்து உற்பத்தியான மது கைடபர் என்ற இரு அசுரர்கள், பிரம்மாவைக் கொல்ல முயற்சித்த பொழுது, பிரம்மா மஹாமாயையை ஸ்துதி செய்ய, அந்த தேவி, விஷ்ணுவின தேகத்தை விட்டு அகலவும், விஷ்ணு எழுந்து, அம் மது கைடபர்களைக் கொல்லுகிறார் என்ற தேவியின் சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் பிரம்மா, அம்பிகையைக் குறித்து செய்யும் ஸ்துதியான 53 முதல் 67 வரையிலுமுள்ள சுலோகங்கள் இராத்திரி ஸூக்தம் என்று சொல்லப்படுகிறது இது தினமும் பாராயணம் செய்யத் தக்கதேயாகும்.

2-வது அத்தியாயத்தில் மஹிஷாஸுரனுடைய சேனைகளின் வதமும், 3-வது அத்தியாயத்தில் மஹிஷாஸுர வதமும், 4-வது அத்தியாயத்தில் தேவர்கள் தேவிக்குச் செய்யும் ஸ்தோத்திரமும் அடங்கி யிருக்கின்றன. இந்த நான்காவது அத்தியாயத்தை எல்லாச் செவ்வாய், வெள்ளிக்கிழமைகளிலும் பாராயணம் செய்தால் மிக நன்மையுண்டு.

5-வது அத்தியாயத்தில் ஸும்ப, நிஸும்ப அஸுரர்களின் தூதனோடு தேவியின் ஸம்வாதமும், 6-வது அத்தியாயத்தில் அவர்களின் சேனாதிபதியான தூம்ரலோசன வதமும், 7வதில் சண்ட முண்ட வதமும், 8வதில் ரக்தபீஜாஸுரவதமும், 9-வது அத்தியாயத்தில் நிஸும்பாஸுரவதமும், 10-வது அத்தியாயத்தில் ஸும்பாஸுரவதமும, 11-வது அத்தியாயத்தில் நாரா

யணி ஸ்துதியும், 12-வது அத்தியாயத்தில் தேவீசரித மஹாத்மியமும், 13-வது அத்தியாயத்தில் ஸுரதன் என்ற அரசனுக்கும், ஸமாதி என்ற வைச்யனுக்கும் வரலாறும் மார்க்கண்டேயரால் கூறப்படுகின்றன. இதிலுள்ள 11-வது அத்தியாயமும் முன் கூறப்பட்ட 4-வது அத்தியாயத்தைப் போலப் பிரதி வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் பாராயண யோக்கியமானதே யாம். தேவீ மஹாத்மிய பாராயணம் செய்பவனுக்கு நிச்சயமாக ஸகல அரிஷ்டங்களும் நீங்குவது நிச்சயம் என்பது அனுபவத்தால் நன்கு உணரலாம். மலைப் பிரமாணத்தில் நம்மை யணுகும் கஷ்டங்க ளெல்லாம், கதிரவனைக் கண்ட பனிபோல் வெகு சீக்கிரத்தில் நம்மை விட்டு அகலும்படி தேவி நிச்சயமாகச் செய்து விடுகிறாள். இது ஒரு முக்கியமான மந்திர சாஸ்திரம் என்று சொல்லப்படுகிறது.

கீர்வாண பாஷை தெரியாதவர்களின் உபயோகத்தின் பொருட்டு நான் இதைத் தமிழில் மொழி பெயர்க்க உத்தேசித் திருக்கிறேன். கீர்வாண பாஷையில் பாராயணம் செய்வோரும் அந்த சுலோகங்களின் அர்த்தம் இதன் மூலம் தெரிந்து கொள்ள முடியும்—பிரதி சுலோகமும் அப்படியே மொழி பெயர்த்திருக்கின்றேன். மந்திர சாஸ்திரமாகையால் மூலத்திலிருக்கும் ஸம்ஸ்கிருத வார்த்தைகளை அப்படியே அனேக இடங்களில் பிரயோகித்திருக்கின்றேன்.

அன்பர்கள் இதைப் பாராயணம் செய்து தேவீப் பிரசாதத்தை அடைந்து இஹலோகத்திலும், பரலோகத்திலும், க்ஷேமங்களைப் பிராபிக்கும் படியாக சண்டிகா தேவி அனுக்கிரகிப்பாளாக. இதை சண்டிகா தேவியின் பாதார விந்தங்களிலேயே அர்ப்பணம் செய்கின்றேன். இதில் ஏற்பட்டிருக்கும் சகலத்துக்கும் அந்த தேவியே பொறுப்பாகையால் அந்த தேவி இதில் ஏற்படும் தவறுதல்களையும் மன்னித்து எம்மைக் காப்பாளாக.

நமஃ சண்டிகாயை

## கதை ஆரம்பம்.

## முதல் அத்தியாயம்.

மார்க்கண்டேயர் சொல்லுவது :—(1-21)

"எட்டாவது மனு சூரிய புத்திரனை ஸாவர்ணி என்று இதற்கு முன் என்னால் சொல்லப்பட்டது. அவருடைய உற்பத்தியைக் குறித்து நான் விஸ்தாரமாகச் சொல்லுகின்றேன். மஹா பாக்யசாலியான அந்த ஸாவர்ணி மன்வந்தராதிபதியானது மஹாமாயையின் அனுக்கிரகத்தால் தான். முன் காலத்தில் ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் சைதிர வம்சத்தில் பிறந்த ஸுரதன் என்ற அரசன் பூமண்டலத்தை எல்லாம் பரிபாலனம் செய்து வந்தான். பிரஜைகளைத் தன்னுடைய சொந்த மக்களைப் போல நன்றாகப் போற்றிப் பரிபாலித்து வந்த அவருக்கு, கொலாவித்வம்ஸிகளான ராஜாக்கள் விரோதிகளானார்கள். பெரும் படையோடு கூடின அந்த அரசனுக்கும் அவர்களுக்கும் யுத்தம் உண்டாயிற்று. சிறிய சேனையோடு கூடின அவர்கள் ஸுரத மஹாராஜாவை ஜயித்து விட்டார்கள். அந்தப் பிரபல சத்துருக்களால்

ஜயிக்கப்பட்ட அரசன் தன்னுடைய தலைநகரை அடைந்து அதற்கு மாத்திரம் அதிபதியாக இருந்து வந்தான்.

தன்னுடைய தலை நகரத்தி லிருக்கும் பொழுதும், அதிக பலசாலியல்லாத அவருடைய பொக்கிஷத்தையும், சைன்யத்தையும் எல்லாம் பலமுள்ளவர்களும் கெட்டவர்களும் துராக்ரஹிகளுமான மந்திரிகள் கைப்பற்றிக் கொண்டார்கள். இந்த மாதிரியாக ராஜ்ய அதிகாரங்கள் அபஹரிக்கப்பட்ட அந்த ஸுரத மஹாராஜா வேட்டைக்குப் போவது என்ற வ்யாஜத்தால் ஒரு குதிரையின் மீது ஏறிக் கொண்டு ஒரு துணையு மில்லாமல் தனியாக ஒரு பெரிய காட்டிற்குச் சென்றார். அந்த வனத்தின் மத்தியில் மஹானுன அவருக்குப் பிரசாந்தங்களான துஷ்ட மிருகங்கள் அதிகம் இருக்கின்றதும், முனிசிடர்களால் அதிகம் பிரகாசிக்கின்றதுமான ஸுமேதஸ் என்ற மஹரிஷியின் ஆசிரமம் காணப்பட்டது. அந்த முனியினுல் அதிதி பூஜைகள் செய்து நன்கு மதிக்கப்பட்ட அவர் அம் முனிவாருடைய ஆசிரமத்தில் கொஞ்ச நாட்கள் சுகமாக வசித்து வந்தார். ஒருநாள் மமதையால் ஆகர்ஷிக்கப்பட்ட மனஸோடு அவர் தானுகவே நினைத்துக் கொண்டதாவது, "முன் என்னுடைய பூர்வீகர்களால் பரிபாலிக்கப்பட்டு வந்த அந்த இராஜதானியை நான் விட்டு விட்டேனே. அதைக் கெட்ட சரித்திரமுள்ள என்னுடைய வேலையாட்களான மந்திரி முதலியோர் நன்கு பரிபாலிக்கிறார்களோ? என்னமோ? எப்பொழுதும் மத ஜலத்தை விட்டுக் கொண்டிருக்கும் என்னுடைய மஹா பிரசித்திபெற்ற அந்தப் பட்டத்து யானை என்னுடைய சத்துருக்களுடைய வசப்பட்டு என்ன செய்கிறதோ? தெரியவில்லையே! என்னிடம் பரிசும், சம்பளமும், போஜனமும், பெற்றுக் கொண்டு என்னுடன் கூட இருந்தவர்க ளெல்லாம் இப்பொழுது வேறு அரசர்களின் கட்டளைப் படியே நடக்க நேரிட்டிருக்கும். துர்விநியோகம் செய்யும் அவர்கள் அனுவசியச் செலவுகள் பல செய்து வருவதனுல் வெகு பாடுபட்டு சம்பாதித்த அந்த கஜானு அதிகச் சீர்கேடு அடையுமே:" என்றெல்லாம் சிந்தித்துக் கொண்டிருந்த அந்த அரசன் அந்த மஹரிஷியின் ஆசிரமத்திற்கு அருகில் ஒரு வைச்யனைப் பார்க்க நேரிட்டது. அப்பொழுது அந்த வைச்யனோடு கேட்டதாவது, "தாங்கள் யார்? இங்கே வரக் காரணமென்ன? ஏன் தாங்கள் அதி துக்கமுள்ளவராகவும் மனதுக்கு ஸ்வாஸ்திய மில்லாதவராகவும் காணப் படுகிறீர்கள்?" இம் மாதிரி ஸ்நேஹத்தோடு கூடின அரசனுடைய கேள்விகளைக் கேட்ட வைச்யன் வெகு வணக்கத்தோடு பதில் கூறுகிறான். "நான் அதிக சம்பத்துள்ள ஒரு பெரிய குலத்தில் பிறந்த ஸமாதி என்ற வைச்யன். பணத்தின் மேலுள்ள ஆசையால் துஷ்டரான என் பாரியையும் புத்திரர்களும் ஒன்று சேர்ந்து என்னை விரட்டி விட்டார்கள். நான் பந்துக்களை விட்டுப் பிரிய நேரிட்டது. என் சொத்துக்களை என் பாரியையும் மக்களும் கைவசப்படுத்தி விட்டார்கள். நெருங்கிய பந்துக்களால் தியஜிக்கப்பட்ட நான் துக்கிதனுக இந்தக் காட்டை யடைந்தேன். இந்த நிலையில் இங்கே இருக்கின்ற எனக்கு என் மக்கள், பாரியை, பந்துக்கள், இவர்களுடைய க்ஷேம சமாசாரங்கள் ஒன்றுமே தெரியாது. அவர்கள் சௌககியமாயிருக்கிறார்களோ? அல்லது கஷ்டப்படுகிறார்களோ? என்னமோ? என்னுடைய புத்திரர்கள் நல்லவர்களா யிருக்கிறார்களோ? அல்லது, கெட்டவர்களாக யிருக்கிறார்களோ? அறியேன்.

ராஜா சொல்லுவது:—(22)

'பணத்தின் மீது ஆசை வைத்து உம்மை விரட்டின அந்த மனைவி மக்கள் மீது உமக்கு இப்பொழுதும் அபிமானம் தோன்றக் காரண மென்ன ?'

வைசியன் சொல்லுவது:—(23–26)

'சரிதான், தாங்கள் கூறுவது போலவே தான் எனக்கும் தோன்றுகிறது. என்ன செய்வது ? என் மனதுக்கு இன்னும் அவ்வளவு காடின்யம் வரவில்லை. பணத்தின் ஆசையினால் பிதிரு சினேகமும், பர்த்ரு சிநேகமும் இல்லாமல் என்னை வெளியில் விரட்டினவரான அந்த மனைவி மக்களிடமே என் மனம் செல்லுகிறது. மகாமதே ! நற்குண மில்லாத அந்தப் பந்து ஜனங்களைத் தான் என் மனம் நாடுகிறது என்று நான் நன்குணர்ந்திருந்தும் இதென்னவோ தெரியவில்லையே ! அவர்களை நினைத்தால் அதிக துக்கமும் நிச்வாஸமும் எனக்கு உண்டாகிறது. என்ன செய்வேன் ? அந்த விசுவாசம் கெட்டவர்களிடம் ஏன் எனக்கு நிர்தயை தோன்றுவதில்லை ?''

மார்க்கண்டேயர் சொல்லுவது:—(27—28)

பிராமணா ! பிறகு அந்த சமாதி என்ற வைசியனும், அந்த அரசனும் ஒன்று சேர்ந்து அந்த மஹரிஷியினிடம் சென்றார்கள். அம் முனி சிரேஷ்டரை நியாயப்படியும், கிரமப்படியும் வந்தனம் செய்து, பக்கத்தில் அமர்ந்து ஒவ்வொரு விஷயங்களைக் குறித்தும் பேச ஆரம்பித்தார்கள்.

அரசன் சொல்லுவது:—(29–33)

"பகவானே ! நான் தங்களிடத்தில் ஒரு சந்தேஹத்தை நிவர்த்தி செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. மனோ தைரியம் என்பது இல்லாததினால் நான் அதிக மனக்கிலேசம் அனுபவிப்பது ஏன் என்று எனக்குக் கூற வேண்டும். மஹரிஷி சிரேஷ்ட ! ராஜ்யத்தை விட்டு வந்தவனான எனக்கு அறிவு என்பது இருந்தாலும், அறிவில்லாதவன் போல ராஜ்யாங்கங்களில் எல்லாம் மமதை தோன்றக் காரண மென்ன ? இந்த வைசியனும், களத்திர புத்திர மித்திர பந்துக்களால் விரட்டப்பட்டவனும் வேலையாட்களால் தள்ளப்பட்டவனும், ஆக யிருந்தும் அவர்களை வெகுவாக நேசிக்கிறான். இவ்விதம் கெட்டவை, பரிஹரிக்கத் தக்கவை என்று நன்றாகத் தெரிந்த விஷயங்களிலும், மமதை என்பது எம்மிருவர் ஹிருதயங்களையும் ஆகர்ஷித்து எங்களைத் துக்கத்தில் வீழ்த்துகிறது. மஹாபாக ! அறிவுள்ளவர்களானாலும் எங்களுக்கு இவ்வாறு வியாமோஹம் தோன்றக் காரண மென்னவோ தெரிய வில்லையே ! இது அவிவேகிகளானவர்களுக்கு உண்டாகின்ற அவிவேகமன்றோ !''

ரிஷி சொல்லுவது:—(34–44)

எல்லா ஜந்துக்களுக்கும் விஷய அறிவு உண்டு. மஹாபாக ! சந்துக்கள் இப்படித் தனித்தனியாகவும் தெரிந்து சொள்ளவும் கூடும். சில பிராணிகளுக்குப் பகலில் பார்க்க முடியாது. மற்றும் சிலவைகளுக்கு இரவில் பார்க்க முடியாது. சில பிராணிகளுக்கு இரவும் பகலும் ஒன்று போலவே

யிருக்கும். மனிதர்களுக்கு ஞானம் உண்டு என்பது உண்மையே. ஆனால் அதனால் என்ன பிரயோஜனம்? பக்ஷி மிருகங்களுக்கும் ஞானம் உண்டு. ஆனால் மனிதர்களுக்கு இருக்கின்றன சாஸ்திர ஞானம் பக்ஷி மிருகங்களுக்குக் கிடையாது. மற்ற ஞானம் மனிதர்களுக்கும் அவைகளுக்கும் சமம் தான். ஞானம் இருந்தாலும் மமதையினால் இந்தப் பறவைகள் தங்கள் பசியைக் கூடப் பாராட்டாமல் தங்கள் குழந்தைகளின் அலகில் ஆகாரத்தைக் கொண்டு கொடுப்பதைப் பார். ராஜாவே! மனிதர்கள் பிரதி பலத்தை எதிர் பார்த்து மக்களைப் பேணுகின்றனர். ஆனால் இந்த விஷயத்தைத் தாங்கள் பார்க்க வில்லையா? ஸம்சாரத்தை நிலையாக யிருக்கும்படிச் செய்ய மஹாமாயையின் பிரபாவத்தால் மமதையாகின்ற சுழியோடு கூடிய அந்த அஞ்ஞானக் குழியில் இவர் கிடக்கிறார்கள். அதனால் இதில் ஆச்சரிய மொன்றுமேயில்லை. அந்த மஹாமாயையானவள் மஹாவிஷ்ணுவினுடைய யோக நித்திரை தேவியாம். அவள்தான் லோகத்தை மோகிக்கச் செய்கிறாள். அந்த பகவதியான மஹாமாயை சில வேளைகளில் ஞானிகளுடைய மனதைக் கூட இழுத்து அஞ்ஞானத்தின் வசமாக்குகிறாள். அந்த மஹாமாயை தான் இந்த சராசரங்கள் அடங்கிய எல்லா உலகங்களையும் சிருஷ்டிக்கிறாள். அம் மஹாமாயையின் அனுக்கிரகத்தால் மனிதர்கள் முக்தியை அடைகிறார்கள். ஸநாதனியான அவள் தான் முக்திக்குக் காரணமான பரமவித்யை. அந்த ஸர்வேசுவரி தான் ஸம்ஸார பந்தத்துக்கும் காரணமாக இருக்கிறாள்.

**ராஜா சொல்லுவது:—(45–46)**

பகவானே! மஹாமாயை என்று தாங்கள் சொன்ன அந்தத் தேவி யார்? எப்படி யுண்டானாள்? பிராம்மண! அவளுடைய பிரவர்த்தி (தொழில்) என்ன? பிராம்மண சிரேஷ்டா! அந்த தேவியினுடைய பிரபாவமும், ஸ்வரூபமும் உற்பத்தியும் எல்லாம் தயவு செய்து எடுத்துக் கூறும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

**மஹரிஷி சொல்லுகிறார்:—(47–52)**

இந்த ஜகத்துக்கு மாதா, நித்யையானவள். அவளே இவ்வுலகத்தை உண்டு பண்ணினவள். ஆனாலும் அவளுடைய உற்பத்தியைக் கூறுகிறேன். தேவர்களுடைய காரியத்திற்காக அவள் எப்பொழுதெல்லாம் உற்பவிப்பாளோ அப்பொழுது அந்த நித்யை பிறந்தாள் என்று உலகத்தில் சொல்லப்படுகிறது. பிரளய காலத்தில் உலகம் பூராவும் ஓரே கடலாக இருந்த பொழுது பிரபுவான விஷ்ணு சேஷசாயியாக யோகநித்திரை செய்தார். அப்பொழுது மஹாவிஷ்ணுவின் காதுகளிலிருந்த அழுக்கிலிருந்து மது, கைடபர் என்ற இரண்டு மஹா அஸுரர்கள் உண்டாகி பிரம்மாவை கொல்லப் புறப்பட்டார்கள். விஷ்ணுவினுடைய நாபியிலிருந்து உண்டான தாமரை மீது வீற்றிருக்கும் பிரஜாபதியான பிரம்மா, அந்த அசுரர்களுடைய கெட்ட குணத்தையும், மஹாவிஷ்ணுவினுடைய நித்திரையையும் பார்த்து, விஷ்ணு நித்திரையை விட்டு எழுந்திருப்பதற்காக, அவருடைய கண்களில் இருக்கின்ற அந்த யோகநித்திரா தேவியை ஓரே நிலையான சித்தத்துடன் தோத்திரம் செய்தார். (தொடரும்.)



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)
(தொகுதி 21, பகுதி 12, 892-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 35-வது காரிகை

ஸாந்தக்கரணாபுத்திஃ ஸர்வம் விஷயமவகாஹதேயஸ்மாத்—தஸ்மாத்திரி விதம் கரணமஹாரிஹாராணி ஸேஷாணி.

[உட்கரணங்கட்கும் வெளிக்கரணங்கட்கும் உள்ள வேற்றுமையை ஓர் பாவனாமுகத்தால் விளக்கலுற்றார்.]

உட்கரணங்களோடு கூடிய புத்தி சகல விஷயங்களை நோக்கவல்லதால், இந்த மூன்றுவிதக் கரணங்களும் துவாரபாலகர் போலவும் மற்றைக் கரணங்கள் யாவும் விஷயங்கள் உட்புகவும் வெளிப்போகவும் ஏற்பட்ட வாயில்கள் (துவாரங்கள்) போலவுமாம்.

உரை. ஞானேந்திரியங்களைந்தும் ஐந்து வாயில்கள்; கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஐந்து வாயில்கள்; இப் பத்துவாயில்களும் ஓர் வாயிலின்கண் ஒன்று கூடுகின்றன. அங்கு நிற்கும் உட்கரணம் மனம். மனம் அங்கு நின்று பத்து வாயில்களையும் நோக்கிக் காக்கின்றது. மனத்தின் அனுமதியால் மற்றும் உட்புகின் அங்கு இருள் ரூபமான மற்றும் ஓர் வாயில் உளது; அங்கு நின்று காப்பவன் அகங்காரம்; அவ்வாயிலையுங் கடந்து உட்செல்லின் யாவற்றையும் விளக்கஞ் செய்யவல்ல ஒளிதங்கிய மற்றும் ஓர் வாயிலுளது. இதுவே இருண்டு வழிமயக்கம் செய்யவல்ல அந்தக்கரணமானவோர் அரண்மனையினுள்ளே பிரகாசிக்கும் விளக்காம். இதனைக் காப்போன் புத்தியாம். இவ் விளக்கு எப்பொழுதும் ஒருபடித்தாய்ப் பிரகாசிக்காமல் ஒரோவழி மழுங்கியும், ஒரோவழி துலங்கியும் பிரகாசித்து நிற்கும். புருஷனாகிய சைதன்னியன் இவ் விளக்கிற்கும் அப்பால் உதிக்கின்றான். புத்தி, அகங்காரம், மனம், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள் பதின்மூன்றுங்கூடிய வொன்றை இலிங்கம் என்றனர். இந்த இலிங்கத்தோடு புருஷன் கூடுவதால்தான் சுக துக்க ரூபமான பிரபஞ்ச வாழ்க்கை ஏற்படுகின்றது. இக் கூட்டம் அற்று விடின் புருஷன் சச்சிதானந்தன் ஆவான்.

## 36-வது காரிகை

யேதே பிரதிபகல்பாஃ பரஸ்பர விலக்ஷணா குணவிசேஷாஃ—கிருத்ஸ்னம் புருஷஸ்யார்த்தம் பிரகாஸ்ய புத்தௌ பிரயச்சந்தி.

[புத்தியே விளக்கென்பதனை மற்றும் நன்கு நாட்டுகின்றனர்.]

குணங்களின் வேற்றுமையால் ஒன்றிற்கொன்று பிரத்தியேக இலக்கணத்தை வகித்த காரணங்களெல்லாம் (தைலமும் திரியும் அக்கினியும் வாய்த்த) விளக்குப்போல ஒன்றுகூடிப் பணி செய்து சகல புருஷார்த்தங்களையும் விளக்கமுறப் புருஷனுக்குக் காட்டி யாவற்றையும் புத்தியினிடம் சமர்ப்பிக்கின்றன.

உரை. புத்தியே ஜோதி, மனமே தைலம், அகங்காரமே திரி, இந்திரியங்களே தைலத்திற்கு ஆதாரமான உபதான காரணங்கள். எவ்விஷயமும் நிகழுங்கால் ஆன்ம போதத்திற் கெட்டிப் பின்னரே மறைந்துறைகின்றது. ஒரு காரணம் பிறக்குங்கால் செவி வாயிலாகப் போதத்திற்குத் தட்டிப் பின்னர்த் தோன்றாது புத்தியின்மாட்டு மறைகின்றது. ரூப, ரச, கந்தங்களும் பரிசமும் அவ்வாறே நிகழும் பொழுது தோன்றிப் பின்னர் போதத்திற்குத் தென்படாமல் புத்தியினிடத்து மறைகின்றன. கேட்ட கானத்தையேனும் பார்த்த காட்சியையேனும் திரும்பக் கேட்கவும் அல்லது பார்க்கவும் விருப்பமுண்டாயின் புத்தியாகிய விளக்கை யேற்றி விஞ்ஞானமய கோசமாகிய அறையில் ஞாபக சொரூபமாய் வதியும் கானத்தையும், காட்சியையும் திரும்பப் பெறலாம். ஆகவே புத்தியே புருஷன் ஈட்டிய சகல சம்பத்துக்களையும் காத்து வைக்கும் பொக்கிஷதாரன்.

Buddhi or Reason or The Lamp of Wisdom is the Custodian of all the treasures acquired by the soul during all its incarnations. Reason is in fact the manager of Purusha.

சாங்கிய சூத்திரம் கூறுவதாவது:—காரணங்கள் ஒன்று கூடித் தொழில் புரிவதன் கண், புத்தி பிரதானிபோல ஒழுகுகின்றது.

## 37-வது காரிகை

சர்வம் பிரத்யுபபோகம் யஸ்மாத் புருஷஸ்ய சாதயதி புத்திः—சைவ சவிசினஷ்டிபுனః பிரதான புருஷாந்தரம் சூக்ஷமம்.

[புத்தியால் புருஷன் அடையவல்ல மற்றும் ஒப்பற்ற நன்மையுள தென்பது.]

புத்தியே புருஷனுக் கேற்பட்ட சகல போகங்களையும் அனுபவிக்கும் வண்ணம் சாதித்துத்தராநின்றதன்றே! இம் மட்டோ, கடை முடிவில் புருஷனுக்கும் பிரதானமாகிய மூலப் பிரகிருதிக்கும் உள்ள அதிநுண்ணிய வித்தியாசத்தைக் காட்டி (புருஷனை)ப் பிரகிருதி சையோகத்தை விட்டு முக்திக் கரையேற்றவும் வாயிலாகும்.

உரை. புத்தியாகிய விளக்கே புருஷனுக்கு மாயா தந்திரங்களையும் ஜாலங்களையும் உள்ளீடோடு விளங்கக் காட்டிப் புருஷனைச் சுதந்தரனுக்கித் தனக்கேற்ற கதிக்கண் வதியச் செய்ய வல்லது. பிரதானந் தொடங்கி பிரிதிவி வரை யமைந்த தத்துவ உற்பவ வொடுக்கங்களைக் காட்டிப் பிரகிருதியைப் புருஷன் ஆட்கொண்டு பணி கொள்ளும் தந்திரத்தைக் காட்ட வல்லது. புத்தியைக் காணுதான் பாதந்திரனே யன்றிச் சுதந்தரத்தைப் பெறான்.

புத்தியைத் தரிசிக்க வல்லோன் ஆத்துமாவாகிய புருஷன் பாத்தி னின்று பிரிந்து மாயையுள் புகுந்து பந்தமாம் தன்மையையும், பின்னர் மாயா விளையாட்டு முடியவும் மாயையினின்றும் தன்னைக் கழற்றிக் கொண்டு பாத் தையுடையும் தன்மையையும் காண்பன்.

அவிழ்க்கின்ற வாறும் அது கட்டுமாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் செல்கின்ற வாறும்
தமிட்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டும்
உணர்த்தும் அவனை யுணரலு மாமே.

எனத் திருமூலர் திருமந்திரத்திற் கூறினர்.

ஆகவே புத்தியே ஸ்போடமுமாம், ஸ்போடமாகிய விந்துவைத் தரிசித் தவர்க்கே பந்தம் பெறும் வரலாறும், விடுதலை பெறும் வரலாறும், பந்த முற்ற ஜீவன் ஜனனமரணச் சுழற்கண் திரிதரும் வரலாறும் விளங்கும். பாஷைகளுக் கெல்லாம் ஆதிவித்தும் விளங்கும். எந்தப் பாஷையின் அர்த் தங்களும் விளங்கும். கலை ஞானங்கள் யாவும் விந்துவில் அடங்கி யிருக்கின் றன. விந்து தரிசன மில்லாதார் முத்திக்கு வழி காணமாட்டார் என்பத னைப் பின்வரும் வாக்கா லுணர்க :—

"மூவகை யணுக்களுக்கும் முறைமையால் விந்து ஞானம் மேவின தில்லையாகில் விளங்கிய ஞானம் இன்றாம்."

புத்தியே மகத் தத்துவமாதலின் புத்தியைக் காண்பவன் மகதைசுவரி யத்தைப் பெறுதல் திண்ணம்.

ஓர் சிறு வாக்கியத்தால் பெரிய முடிவைக் கட்டுவோம்.

தந்திரமெல்லாம் கூடி நினைப்பது எப்படி யென்றும் மறப்பது எப்படி யென்றும் உணர்ந்து தன்னைச் சுய தந்திரத்திற் கட்டித் தன்னைத் தானே கட் டவிழ்த்துக் கொண்டு வெளியேறுகையாம்.

## 38-வது காரிகை.

தன்மாத்ராண்ய விசேஷாஸ்தேப்யோ பூதானி பச்ச பஸ்ச்சப்பியஃ—
ஐதேஸ் மிருதா விசேஷாஃ சாந்தாகோராச்ச மூடாச்ச.

தடிப் பெய்தாது (சாதாரண மாந்தர் தோற்றத்திற்கு அப்பாற் பட்டு) நிற்பன தன் மாத்திரைகள். இவற்றினிட மிருந்தே தடிப்பெய்தி, நீர், தீ, காற்று, ஆகாசம், மண் ஆகிய பஞ்சபூதங்களும் (வெளிப்பட்டுத்) தோன் றின.

இவ்வாறு பஞ்ச தன்மாத்திரைகள் தடிப்பெய்தி அறிவை யுறுத்தல் தால் தான் அவை சந்தோஷத்தையும் பயத்தையும், மூர்ச்சையையும் (தூக் கத்தையும்) விளைவிக்கின்றன.

உரை. ஆகவே பஞ்ச தன்மாத்திரைகள் தந் நிலையில் நிற்குமிடத்து ஊன் தேகத்தைத் தாங்கிய மாந்தர்க்கு சுக.துக்கப் பிராப்தியை உண்டு

பண்ண மாட்டா. பஞ்ச தன்மாத்திரைகள் யோகிகளுக்குப் பிரத்தியக்ஷமாய்த் தோன்றவல்லன. சிறிது தன் மாத்திரைகளை விளக்குதும்.

பிராணிகளும் மாந்தரும் மௌனமா யிருப்பின் அவர்களுள்ளே யிருக்கின்ற சப்தம் வெளிப்பட்டுத் தோன்றாது. இவ்வாறே ஒவ்வொரு பொருளிடத்தும் சப்த முளது. மரத்திலும், கல்லிலும், நீரிலும், காற்றிலும் தீயிலும், ஆகாசத்திலும் சப்தங்கள் மறைவா யுறைகின்றன. அன்றியும் ஒவ்வொரு பொருட்கும் உயிரா யிருந்து அதனை வளர்ப்பது மந்திர ரூபமான சப்தமே. இந்த இரகசியத்தை யுணர்ந்தவரே அசேதன (அறிவில்லா)ப் பொருளையும் சேதனமாக்கிப் பணி கொள்ள வல்லார். திருமாளிகைத் தேவாது சரித்திரத்தால் இதன் உண்மையைத் தெளிக.

அக்கினி யெரிந்து தத்காலம் அவிந்து ஒன்றுமே தோன்றாத விடத்திற்கு ஒருவன் செல்வானாயின் அக்கினி யொன்றும் அவ்விடத்திற் காணப்படாதாயினும், தேகத்திற்கு வெப்பம் உண்டாவதை யுணருவான். குளிர்காலத்தில் ஓர் மனிதன் படுத்துறங்கி நீங்கிய இடத்திற்கு ஒருவன் சென்று அவ்விடத்தை மிதிக்க நேரின் உஷ்ண பரிசத்தைக் காண்பன். ஆகவே கண்ணிற்குப் புலப்படாது பரிச தன் மாத்திரைகள் உறையவல்லன வென்பதும் துணியப்படும்.

ரூப தன்மாத்திரைகளைக் கொண்டே தூரதிருஷ்டிக் கண்ணாடியால் தொலைவில் வனக் கண்ணின் பார்வைக்குத் தென்படாது உறையும் பொருளை, அதனுடைய சாயலை அருகு வரவழைத்துக் காண்பர். அன்றியும் நாம் நமது முகத்தைக் கண்ணாடியில் தரிசிக்கும்பொழுது நமது முகத்தினின்று எவ்விடத்தும் பரவாநின்ற ரூப தன்மாத்திரைகள் கண்ணாடியில் தாக்கி நமது கண்ணை நோக்கித் திரும்பிவந்து கட்புலனை தொட்டு நமது ரூபத்தை நமக்குத் தரிசிப்பிக்கின்றன. சுத்த ரூப தன்மாத்திரைப் படங்களைக் காண விரும்புபவர் புகைப்படம் பிடிப்பாரைக் கிட்டி யுணர்க.

வெய்யிலினாலும் முயற்சியினாலுங் களைத்து நீர்தேடி யோடுபவன் குளிர்ந்த சோலையும் தடாகமும் வாய்த்த ஓர் இடத்தைக் கிட்டலும் அவனுடைய அடங்காத் தாகம் எவ்வாறு நீர் அருந்தும் முன்னரே யடங்குகின்றது? ரச தன் மாத்திரைகள் அவ்விடத்து நிறைந்துளது ஆதலினன்றே அவை யிவனுடைய தேகத்திற் புகுந்து தாகத்தின் கொடுமையை யடக்குகின்றன.

எப்பொருளிடத்தும் கந்த தன்மாத்திரைகள் உள்ளன. கல்லைப் பொடி செய்து மூக்கின் அருகிற் கொண்டுபோவோமாயின் கல்லினிடத்துள்ள மணமும் வெளியாகின்றது. நாற்றத்தின் இரகசியத்தை யறிதலே சொர்க்க போகத்திற்கு முதற்படியெனக் கூறுவர். நாற்றத்தின் இரகசியத்தை யுணராத தன்மையாலன்றே நக்கீரனும் இறைவனை யறியாது அஞ்ஞான வயத்தனாய் நின்றதும்.

---

# ஆசிரியர் குறிப்புக்கள்

## காங்கிரஸ் காரியக்கமிட்டி

சென்றமாதம் காங்கிரஸ் காரியக்கமிட்டியின் கூட்டம் வார்தாவில் நடைபெற்றது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்கையை எதிர்த்துப் போராடும் அராபியரிடம் அநுதாபம் தெரிவிப்பது, தேசியக் கக்ஷியுடன் கலப்பதற்குரிய ஏற்பாடு செய்வது, பிரஜா உரிமைப் பாதுகாப்புச் சங்க ஏற்பாடு முதலிய முக்கிய விஷயங்களைப் பற்றிக் காங்கிரஸ் காரியக்கமிட்டியார் விவாதித்து முடிவு செய்தமை குறிப்பிடத்தக்கதாகும். அடுத்த தேர்தலுக்கான ஏற்பாடுகளைப் பற்றியும் ஆலோசிக்கப்பட்டது. ஆனால், காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்கவேண்டுமா வேண்டாமா? என்பதைப் பற்றிக் காரியக்கமிட்டி எத்தகைய குறிப்பையும்காட்டிக் கொள்ளாதது வியப்பாகவே இருக்கிறது. பதவி ஏற்பு விஷயம் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி முடிவு செய்யக் கடமைப்பட் டிருக்கிறதானாலும் காரியக்கமிட்டியார் இதறகொரு வழிகாட்டக் கடமைபட் டிருக்கிறார்கள் என்பதை எளிதில் மறுப்பதற்கு இல்லை. பதவி ஏற்பு விஷயத்தில் காங்கிரஸ் தலைவரும் மற்றக் காங்கிரஸ் சமதர்ம வாதிகளும் மாறுபட்ட அபிப்பிராயங் கொண்டிருப்பதால் நாட்டு மக்கள் மனம் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. எப்படியும் அடுத்தமாதம் பம்பாயில் கூடப்போகும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி இவ்விஷயத்தில் ஒரு முடிவு காணவேண்டும்; அதற்குக் காங்கிரஸ் காபினட் இப்பொழுதே அடிகோலி யிருக்கவேண்டும் என்பது நமது கருத்து. அந்தச் சமயத்திலாவது காரியக்கமிட்டியார் அதற்கு ஏற்பாடு செய்வார்களா?

---

## எதியோப்பியச் சக்கரவர்த்தியின் முறையீடு

சர்வதேச சங்கத்தில் எதியோப்பியச் சக்கரவர்த்தி மிகவும் உருக்கமான தோரணையில் முறையீடு செய்துகொண்டார். தர்ம நீதிகளை நினைவுட்டினார். இத்தாலியரின் காட்டுமிராண்டித்தனமான போர் முறைகளை விவரித்தார். "ஒன்பது முதல் பதினெட்டுவரை இத்தாலிய விமானங்கள் கூடிக் கொண்டு விஷப்புகை முதலியவைகளை உபயோகித்து அட்டூழியம் செய்தன. சிப்பாய்களும் சாதாரண மக்களும் கால் நடைகளும் இதனால் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமல்ல. இத்தாலியர் குடிதண்ணீரில் விஷங்கலந்தனர். புல் தரைகளை நாசமாக்கினர்" என்று கல்லுங் கரையுமாறு சக்கரவர்த்தி கூறினார். "நான் சர்வதேச சங்கத்தை நம்பினேன். சர்வதேச சங்கம் உறுதியாக நின்றிருந்தால் நிலைமை வேறுவிதமாக மாறியிருக்கும். எங்களுக்கு ஒரு நாடாவது உதவி அளிக்கவில்லை. நாங்கள் கோரிய பொருளுதவி கிடைக்க வில்லை. அபிஸீனியாவுக்கு ஆயுதங்கள் கிடைக்கா வண்ணம் எல்லா நாடுகளும் தடையுத்தரவுகள் விடுத்தன. உங்கள் வாக்குறுதி எங்கே!" என்று முகத்தில் இடித்துக் காட்டுவதுபோல் பேசினார் சக்கரவர்த்தியார். சர்வதேச சங்கம் தலைகுனிய வேண்டியதைத் தவிர வேறு என்ன பதில் சொல்லும்? சக்கரவர்த்தி குறிப்பிட்டதுபோல் சர்வதேச யோக்கியப் பொறுப்பே இப்போது ஆபத்தில் இருக்கிறது. சர்வதேச சங்கம் இருந்தும் இறந்ததே என்னும் உண்மை இதற்கு முன்னரே நிரூபணமாகி விட்டது.

எனவே எதியோப்பியச் சக்கரவர்த்தியின் முறையீடு வெறுங்கானகக் கூச்சலே ஆகும். பிறகுசர்வதேச சங்கம் இத்தாலிமீது விதித்திருந்த பொருளாதாரநிர்ப்பந்தங்களை நீக்கிவிட்டது. இதுதான் முறையீட்டின் பலன்போலும்!

---

## கொச்சியிலும் தேவதாஸிமுறை ஒழிப்பு

வைதிகத்திற்குப் பேர்போன கேரள சுதேச் சமஸ்தானங்கள் சமூகச் சீர்திருத்தத் துறையில் முற்போக்குணர்ச்சி காட்டி வருவது பெரிதும் மகிழ்ச்சிக்குரிய செய்தி ஆகும். முன்னர்த் திருவனந்தபுரம் சமஸ்தானம் கோவிலில் பெண்களுக்குப் பொட்டுக் கட்டுதல் கூடாது என்று சட்டம் செய்தது. தீண்டாமை விலக்கு விஷயத்திலும் வெகு முற்போக்கான சட்டத்தை இயற்றிவைத்திருக்கிறது. இப்பொழுது கொச்சி சமஸ்தானமும் திருவனந்தபுரத்தைப் பின்பற்றி வருவது கவனிக்கத்தக்கதாகும். அதாவது கொச்சி சமஸ்தானத்திலுள்ள கோவில்களில் பெண்களுக்குப் பொட்டுக் கட்டி விடுதல் சட்ட விரோதம் ஆகும் என்று மஹாராஜா உத்தரவிட்டிருக்கிறார். இக் காரியத்தைச் செய்கிறவர்களுக்கும், உடந்தைக் குற்றவாளிகளுக்கும் ஒரு ஆண்டுச் சிறைத் தண்டனையும் ஆயிரம் ரூபா வரை அபராதமும் விதிக்கச் சட்டத்தில் இடமேற்படுத்தப் பட்டிருக்கிறது. பொட்டுக் கட்டிய பெண் பிறகு ஒரு புருஷனை மணம் செய்து கொண்டு மற்றவர்களைப் போல் வாழும் உரிமைக்கும் ஏற்பாடு செய்திருப்பது பாராட்டத் தக்கதாகும். முன்னர்த் தமிழ் நாட்டிலும் கோயில்களில் பெண்களுக்குப் பொட்டுக் கட்டிவிடும் அநாகரிகவழக்கம் ஒழியவேண்டும் என்று ஒரு கிளர்ச்சி ஏற்பட்டது. டாக்டர் முத்துலக்ஷிமி ரெட்டிஅம்மையார் அத் துறையில் அரும்பாடுபட்டார். நமது நாட்டு வைதிகர்களும் ஒரு சில அரசியல் தலைவர்களும் அக்கிளர்ச்சியை மண்டையில் அடித்து அடக்கிவிட்டார்கள். திருவனந்தபுரம்—கொச்சி சமஸ்தானங்கள் தமிழ் நாட்டுக்கு நல்லுணர்வையும் விழிப்பையும் அளிக்கவேண்டும் என்று எதிர் பார்க்கின்றோம்.

---

## வேலியே பயிரை மேய்ந்தால்?

பிரஜைகளின் க்ஷேமலாபங்களைப் பாதுகாக்க வேண்டியது—அவர்களுக்குத் தொண்டு புரிய வேண்டியது போலீஸாரின் கடமை. ஆனால் பொதுவாக நம் நாட்டுப் போலீஸ் வருக்கத்தின் மனப்பான்மை அத்தகையதாயில்லை என்பது கண்கூடு. ஆண்மை மிடுக்குடன் அதிகாரஞ் செலுத்தப் பிறந்தவர்கள் போலீஸார் என்ற பாவனை எங்கும் நிலவிவருகிறது. இதற்குப் பிரிட்டிஷ் இந்தியாவில் நடைபெற்ற எத்தனையோ நிகழ்ச்சிகளை உதாரணமாகக் காட்டலாம். இங்கேதான் இப்படி யென்றால் ராமராஜ்யம் என்று புகழ்ந்து போற்றப்படும் மைசூர் ராஜ்யத்திலும் போலீஸாரின் எதேச்சாதிகாரம் தலைவிரித்தாடுவதாகவே தெரிகிறது. சமீபத்தில் நடைபெற்ற மைசூர் சட்டசபைக் கூட்ட நடவடிக்கைகளிலிருந்து இவ்வுண்மை வெளியாகிறது. சந்தேகத்தின் மீது கைது செய்யப்பட்ட ஒரு நபர் போலீஸ் காவற்கூடத்தில் அடிபட்ட காரணத்தால் உயிர் துறந்தானாம். பெங்களூருக்கருகில் கலஹள்ளி என்ற கிராமத்தில் நடந்த தேர்த் திருவிழாவின்போது ஒரு வாலிபனுடைய வாயில் போலீஸார் செருப்பைக் கௌவும்படி கொடுத்து ஜனக்கூட்ட மத்தியில் ஊர்வலம் செய்வித்தார்களாம். இக் கொடிய செயலை

ஆக்ஷேபித்த பிரமுகர்களையும் அச்சுறுத்தினார்களாம். ஸ்ரீமான்கள் மல்லப்பாவும், வெங்கிடப்பாவும் போலீஸ் இலாகா நிர்வாகத்தைக் கண்டிக்கும் அறிகுறியாக 100 ரூபாய் வெட்டுப் பிரேரேபணை கொண்டு வந்து இவ் விவரங்களை வெளியிட்டார்கள். இந்தக் குற்றச் சாட்டுகளுக்குப் போலீஸ் இலாகாத் தலைவர் என்ன சமாதானங் கூறினார் என்பது சரியாக விளங்கவில்லை. ஷை குற்றச் சாட்டுகள் உண்மையானால் போலீஸாரின் கொடுங் கோன்மைக்கு வேறு உதாரணமும் வேண்டுமா என்று கேட்கின்றோம். போலீஸாரின் கொடுமைகள் எங்கும் ஒரே மாதிரியா? வேலியே பயிரை மேய்ந்தால்?

---

## இலங்கைப் பெண்கள் முற்போக்கு

நாளுக்குநாள் பெண்கள் சிறிதுசிறிதாகத் தங்கள் நிலைமைகளையும் உரிமைகளையும் உணர்ந்துகொண்டு வருகின்றனர். இக்காலத்தில் பெண்கள் சர்வகலாசாலை பட்டங்களைப் பெற்று வருகின்றனர். ஆசிரியர்களாகவும், டாக்டர்களாகவும், வக்கீல்களாகவும் விளங்கி வருகின்றனர். சட்டசபை, ஜில்லாபோர்டு, நகரசபைகளின் அங்கத்தினர்களாகவும இருந்து வருகிறார்கள். கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகளாகவும் நியமனம் பெற்று வருகின்றனர். இலங்கைப் பெண்கள் இன்னும் ஒருபடி மேலே ஏற விரும்புகின்றனர். அதாவது இலங்கையில் சமீபத்தில் நடைபெற்ற பெண்கள் சங்கக் கூட்டத்தில் தங்களுக்குச் சிவில் சர்விஸ்களிலும் உரிமை இருக்கவேண்டும் என்று கோரியிருக்கின்றனர். இது பெண்களின் முற்போக்குணர்ச்சிக்குச் சிறந்த அத்தாக்ஷி ஆகும் என்பதில் ஐயம் இல்லை. பெண்கள் ஆண்களைப் போலவே உத்தியோகங்களையும் வெளி விவகாரங்களையும் மேற்கொள்ளலாமா என்பது விவகாரத்திற்குரியவிஷயம். ஆனால் தற்சமயம் அதைப்பற்றி விவாதித்துக்கொண்டிருப்பது நமது நோக்கம் அன்று. இக்காலப் பெண்ணுலகில் ஏற்பட்டுவரும் விழிப்புக்கும் உணர்ச்சிக்கும் ஒரு எடுத்துக் காட்டாகவே இலங்கைப் பெண்கள் தீர்மானத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகின்றோம்.

---

## சி. ஆர். ஸ்ரீநிவாஸையங்கார் பிரிவு

கீர்த்தனாச்சார்ய சி. ஆர். ஸ்ரீநிவாஸங்கார் இவ்வுலக வாழ்வை நீத்தார் என்ற செய்தி தென்னிந்திய சங்கீத உலகில் பெருங்கவலையை உண்டாக்கி விட்டது. பெரியார் ஸ்ரீநிவாஸையங்கார் சிறந்த சங்கீத சாஸ்திர விற்பன்னராகவும் பாஷா பண்டிதராகவும் விளங்கினார். சங்கீதக்கலை வளர்ச்சியைப் பற்றியும், சங்கீத வித்துவான்களைப் பற்றியும் இவர் எழுதிய எழுத்துக்கள் பெரிதும் விரும்பிப் படிக்கப்பட்டன. ஸ்ரீமான் ஐயங்கார் ஆங்கிலத்திலும் தமிழிலும் மொழி பெயர்த்துள்ள வால்மீகி ராமாயணம் அவரது புலமைச் சிறப்பை வெளியிடும். அவர் எழுதியுள்ள ஆழ்வாராதிகள், ஏனைய சமயத் தலைவர்களின் வரலாறுகள் அவரது சமயப்பற்றை வெளிப்படுத்தும். இத்தகைய பெரியாரின் பிரிவு சிறப்பாகச் சங்கீத உலகத்திற்கும் பொதுவாக மொழி—சமய உலகிற்கும் பெரிய நஷ்டமாகும். அரும்பெறற் பெரியாரைப் பிரிந்து வருந்தும் அவரது குடும்பத்தாருக்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். அவரது ஆன்மா சாந்தி அடைவதாக.




# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(தொகுதி 21. பகுதி 12. 959-ம் பக்கத் தொடர்ச்சி.)

"உங்களுக்கு சொப்பனத்தில் நம்பிக்கை யுண்டா?"

"உண்டு. ஏன்?" என்று சொல்லிக் கொண்டே தனது இரு கரத்தினுலும் லக்ஷ்மிபாயின் மிருதுவான கன்னங்களை வழித்து முத்தமிட்டுக்கொண்டான் சர்தார் ஹுசேன்.

"நான் நேற்றிரவு ஒரு சொப்பனங் கண்டேன். அதை நினைத்தாலே பயமாய் இருக்கின்றது. இந்த நள்ளிரவில் இங்கே வருவதற்குக் கூட அச்சமாகவே இருந்தது. ஆனுல் அந்த சொப்பனங் கண்டதிலிருந்து உங்களுக்கு ஏதாவது விபத்து வருமோ வென சந்தேகமா யிருக்கிறபடியால், உங்களைப் பார்த்து விட்டுப் போகலா மென்றே இங்கு வந்தேன்."

"என்ன சொப்பனம் கண்டாய்?"

"இந்தக் கோட்டையை பகைவர்கள் வந்து தாக்கி முற்றுகை யிட்டது போ விருந்தது. இங்குள்ள படைவீரர்கள் கடும் போர் புரிந்து பகைவர்களைத் துரத்தி யடித்தாகள். ஆனுல் உங்களை மட்டும் ஓர் சிப்பாய் கத்தியால் வெட்டிக் காயப்படுத்தி விட்டு சிறை செய்து கொண்டு போய் விட்டான். நான் இந்தச் செய்தி கேள்விப்பட்டு அழுதுகொண் டிருந்தேன். திடீரென்று கண் விழித்தேன். என் கண்களில் கண்ணீர் உண்மையாகவே தாரை தாரையாக வடிந்திருந்தது," என்ருள். இப்பொழுதும் அவளது கண்களில் கண்ணீர் வடிவதைக் கண்ட சர்தார் ஹுசேன் தனது பீதாம்பரக் குட்டையினுல் அவளது கமலக் கண்களைத் துடைத்து விட்டான்.

"சே! நீ அஞ்ச வேண்டாம், கண்ணே! எனக்கு ஒரு குறைவும் வராது."

"நல்லது. அது போனுல் போகட்டும். தினம் நான் வரும் போதும் போகும் போதும் எனக்குத் தெரியாமல் யாரோ என்னைப் பின் தொடர்ந்து வருவது போல் தெரிகிறது. அந்த ஆளைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று நானும் என்னுல் கூடிய மட்டும் பார்த்தேன். ஒருவரும் அகப்பட வில்லை."

"ஓ! அப்படியா? யாராவது சேடிமாரின் சேஷ்டையாய் இருக்குமோ?"

"நான் அப்படி நினைக்க வில்லை. ஆனால் உங்கள் சேவகனான குரூரன் இருக்கின்றானே, அவன் பேரில் தான் எனக்குச் சந்தேகம்."

"ஏன் அவன் பேரில் சந்தேகம்? அவன் பரம யோக்கியன்."

"அவனைக் கண்டாலே எனக்கு வெறுப்பாய் இருக்கின்றது. என்னையே சதா உற்று உற்றுப் பார்க்கிறான். இரண்டொரு தடவை நான் தனியாய்ப் போகும் பொழுது சந்தடி செய்யாமல் என் பின்னாலேயே வந்தான். சுரங்கங்களில் அடிக்கடி நான் வரும்பொழுது ஜன நடமாட்டம் கேட்கிறதே? இவனைத்தான் இருக்க வேண்டும். இன்று கூட நான் வரும் பொழுது பின்னால் ஆள்வரும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஓர் மனித உருவம் வேகமாய் ஓடி மறைந்தது போல் தோன்றியது. நானும் கட்டாரியை எடுத்துக் கொண்டு பின்னாலேயே ஓடி எங்கும் தேடினேன். யாரும் காணப்பட வில்லை. எனக்கு குரூபியின் பேரில் சந்தேகம் உண்டல்லவா? வந்ததும் அவனது இடத்தைக் கவனித்தேன். ஆனால் அவன் அங்கில்லை." என்றனள்.

"கண்மணி, நீ வீணிலே குரூபியைச் சந்தேகிக்க வேண்டாம். அவன் நமக்குத் துரோகமே நினைக்க மாட்டான். அவனைப்போல் நம்பிக்கையான சேவகன் நமக்குக் கிடைப்பது அரிது. அதை உணர்ந்து தான் மரண தண்டனையி னின்றும் நான் அவனை விடுவித்தேன். அவனும் அந்த நன்றி மறவாமல் இருந்து வருகிறான்." என்று சொல்லி முடித்தான் ஹூசேன். உடனே அந்த உப்பரிகை மேலே ஆட்கள் ஏறிவரும் சத்தம் கேட்டு இருவரும் திடுக்கிட்டார்கள். சிறிது நேரத்தில் மஹாலின் வெளிக் கதவைப் பலமாய்த் தட்டும் சத்தம் வந்தது. லக்ஷ்மிபாய் நடு நடுங்கிப் போய் விட்டாள். ஹூசேன் அஞ்ச வில்லை. யானைக் கூட்டத்தைக் கண்ட சிங்கம் போல் சீறி எழுந்து ஓர் கையால் லக்ஷ்மிபாயை அணைத்துத் தூக்கியபடியே கள்ள வழியிருக்கும் இடத்தை அடைந்து அதன் வழியாய் அவளை ஒரு முத்தம் கொடுத்து அனுப்பி விட்டான். பிறகு அந்த வழியை மூடி விட்டு மிக உஷாராய் கதவை நோக்கி நடந்தான்.

"யார் அங்கே? இந்த நடு நிசியில் ஏன் வந்தீர்கள்?" என்று அதட்டினான்.

"மஹாராஜா கட்டளை. உடனே கதவைத் திறக்கவேண்டும்," என்று இரண்டு மூன்று குரல் ஏக் தேசத்தில் கூவின.

"மஹாராஜா கட்டளைப்படி என்ன வேண்டும்?"

"கதவை முதலில் திறக்க வேண்டும்."

லக்ஷ்மிபாய் தன்னுடன் இருந்த விஷயம் மஹாராஜாவுக்கு எட்டித் தன்னை அவர் பிடித்துவரச் சேவகர்களை அனுப்பினாரோ என்ற சந்தேகம் அவனது மதில் உதித்தது. லக்ஷ்மிபாயின் கௌரவத்திற்கு ஈனம் வருமோவென நினைத்ததும் அவனது அஞ்சாத நெஞ்சத்தில் கொஞ்சம் திகில் பிடிக்க ஆரம்பித்தது. உடனே தன்னையும் மறந்து கதவைத் திறந்து விட்டான்.

ஆறு போர்வீரர்கள் உள்ளே வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் சர்தார் மாபத்கான் வந்தார்.

"ஸலாம் சர்தார்." என்றார் மாபத்கான்.

"ஸலாம். என்ன விசேஷம்? இந்த நடு இரவில் க்ஷேமம் விசாரிக்கிறீர்கள்?" என்றான் ஹுசேன்.

"மஹாராஜா *அந்தேர் தர்பார் நடத்துகிறார். அவர் சமூகத்துக்கு உம்மை கையோடு அழைத்துவரச் சொன்னார்கள். வேறு எனக்கு தெரிய வராது." என்றான் மாபத்கான்.

ஹுசேன் பதில் பேசாமல் அவர்கள் பின்னால் சென்றான்.

ராஜாவின் முகத்தில் பயங்கரமான கோபக் குறி இருப்பதை ஹுசேன் கவனித்தான். ஆனால் அவன் அறியாதவன் போல் மன்னருக்குச் செய்ய வேண்டிய மரியாதையை செய்து நின்றான்.

"சர்தார் ஹுசேன்கான்! க்ஷேமந்தானா?" என்றார் மன்னர்.

"அடியேனை இந்த நள்ளிரவில் திடீரென்று அழைத்து வந்து க்ஷேமம் விசாரிப்பதின் மர்மம் அடியேனுக்கு தெரியவில்லை. மஹாராஜா மன்னிக்க வேண்டும்."

"நாம் எல்லா விஷயமும் இப்போது விளங்க வைப்போம். நீ இராஜ துரோகி அல்ல என்பது உன் மனதிற்கே நிச்சயமாய்த் தெரியுமா?"

இதைக் கேட்டதும் ஹுசேன் திடுக்கிட்டான். கோபத்தினால் அவனது கண்கள் சிவந்தன.

"ராஜ துரோகம்! ஆ! கடவுளே! என் சொப்பனத்தில் கூட நினைத்ததில்லையே. அந்த அநியாயமான கேள்வி என்னைக் கேட்கக் கூடாது" என்றான்.

"ஓ! அப்படியா? நல்லது. எவ்வித முகாந்தரமும் இல்லாமல் நமது ராஜ்யத்தின்பேரில் படை எடுத்து வந்த ஆங்கிலேயருடன் நமக்கு அதிக நேசப்பான்மை இல்லை என்பது நீ கேள்விபட்டிருக்கின்றாயா?"

"ஆம்."

"நல்லது. நமக்கு விரோதியுடன் நீ கடிதப் போக்குவரத்து அந்தரங்கத்தில் வைத்துக் கொண்டிருந்தால் அது நமக்கு துரோகம் நினைத்ததாகவே முடியும் அல்லவா?"

ஹுசேன் பதில் சொல்லாமல் மௌனமாய் நின்றான்.

"சென்னப்பட்டினத்தில் இருக்கும் ஆற்காட்டு முற்றுகையில் வெற்றி பெற்ற ராபர்ட் க்ளைவ் என்னும் ஆங்கில வீரரோடு நீ நமககுத் தெரியாமல் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருக்கின்றாய் அல்லவா?"

ஹுசேன் திடுக்கிட்டான். உடனே சந்தோஷப்பட்டான். ஏனெனில் அரசனுடைய கோபம் லக்ஷ்மிபாய் சம்பந்தப்பட்டதல்ல என்று கண்டு கொண்டான்.

---

*இரவில் நடத்தும் தர்பார். அந்தேர் என்றால் இந்துஸ்தானியில் இருட்டு என்று பெயர்.

"நாம் கேட்டதற்கு உடனே பதில் வரவேண்டும்" என்று துரிதப் படுத்தினர் மஹாராஜா.

"க்ளைவ் துரையிட மிருந்து எனக்கு ஓர் கடிதம் வந்ததுண்டு."

"அதை ஏன் நமக்குக் காண்பிக்கவில்லை ?"

"அதில் தங்களுக்கு சம்பந்தப்பட்ட விஷயம் ஏதுமில்லை."

"நிச்சயந்தானா ?"

"நிச்சயந்தான்."

இதைக்கேட்டதும் மஹாராஜா நகைத்தார். சந்தோஷத்தினல் அல்ல; கோபத்தினல்.

"க்ளைவ் திரிசிராப்பள்ளியில் முற்றுகை யிட்டிருக்கும் சந்தா சாஹேபு வின் பேரில் படையெடுத்து வரப்போவதாகக் கேள்வியாயிற்றே, அது உண்மைதானா ?"

"ஆம். உண்மைதான்."

"அப்போது நமது கோட்டையை திடீரென்று அவர் தாக்கலாம் அல்லவா ?"

"நான் அப்படிக் கருதவில்லை."

"ஏன் நீ அப்படிக் கருதவில்லை ?"

"ஏனென்றால் நமது ராஜ்யத்தின் பேரில் திடீரென அவர்கள் படையெடுக்கப் போதிய காரணமில்லை."

"காரணத்தோடுதான் முன்பு நமது தேவிக்கோட்டையின் பேரில் படை யெடுத்தார்களா ?"

"க்ளைவ் அவ்விதம் செய்யமாட்டார் என்பது எனது அபிப்பிராயம்."

க்ளைவ் துரையை உயர்த்தியே பேசியதால் அவன் பேரில் ராஜாவுக்கு அடங்காத கோபம் உண்டாகியது. உடனே தம்மிடமிருந்த ஒரு காகிதச் சுருளை எடுத்து ஹுசேனிடம் காண்பித்தார். அதைப் பார்த்ததும் அவன் திடுக்கிட்டான். ஏனென்றால் அதுதான் தனக்கு க்ளைவ் துரையினல் எழுதப் பட்ட கடிதம் என்பதை அவன் உணர்ந்தான்.

"ஹை! இதை என்னிடமிருந்து யாரோ களவாடி யிருக்கின்றார்கள்." என்றான் ஹுசேன்.

"ராஜ துரோகி யிடமிருந்து களவாடினல்தான் என்ன ?" என்று சினந்தார் மஹாராஜா.

"நானா ராஜதுரோகி ?"

"சற்று பொறு; அந்தக் கொடிய சர்ப்பம் யார் என்று விளங்கும்" என்று சொல்லிக்கொண்டு அந்தக் கடிதத்தை நீதிபதியிடம் கொடுத்து இரைந்து வாசிக்கும்படி சொன்னார் ராஜா.

இங்கிலீஷில் எழுதியிருந்த கடிதத்தை பின்வருமாறு மொழிபெயர்த்து வாசித்தார் நீதிபதி:—

"அருமை நண்பரே,"

........................................................தங்களது தஞ்சைமா நகரிலிருந்து 6000 போர் வீரர்களை திரிசிராப்பள்ளிக்கு அனுப்புவதாக மஹாராஜா வாக்களித்திருக்கின்றார்களாமே. ரொம்பவும் வந்தனம். நானும் மேஜர் லாரென்ஸூம் ஒரு பெரும் படையோடு திரிச்சிக்கோட்டைக்கு வந்து பிரெஞ்சுக்காரர்களையும் சந்தா சாஹேபுவையும் விரட்டியடிக்க உத்தேசம். விபரம் பின்னடி தெரிவிக்கின்றேன். நாம் யோஜித்திருந்த சூழ்ச்சி நிறைவேறுவதற்கு இதுவே நல்ல தருணம், தஞ்சையிலுள்ள 6000 மஹாராஷ்டிர வீரர்களும் திருச்சிக்குப் போயிருக்கும்போது தஞ்சைக் கோட்டையை நாம் எளிதில் கைப்பற்றிவிடலாம். அரசனுக்கு பென்ஷன் கொடுத்து விட்டு உங்களை கவர்னராக நியமித்துவிடலாம்.''

இதைக்கேட்டதும் ஹூசேன் திகைத்துப்போய் நின்றான். மஹாராஜா கோபாவேசத்துடன் எழுந்தார்.

"தஞ்சாவூர் கோட்டையை அன்னியருக்குக் காட்டிக் கொடுத்துவிட்டு கவர்னர் பதவி பெறுவதற்கு சூழ்ச்சி செய்த ராஜத்ரோகி யார் என்று இப்போது தெரிகிறதா!'' என்று கர்ஜனைசெய்தார். அவர் மீசை படபட வென்று துடித்தது. கண்கள் இரண்டும் கோவைப் பழம்போல் சிவந்தன. ஹூசேன் தவிர மற்றவர்கள் யாவரும் நடுநடுங்கிப் போய்விட்டனர்.

"இது யார் செய்த சூது? இது யாருடைய வஞ்சனை? இது யாருடைய அடாத செயல்? இது யார் நினைத்த மோசம்? அட ஆண்டவா! நீ அறிய நான் ஒரு பாவத்தையும் அறியேன்! மிக மோசடியான வார்த்தைகளை அதில் எழுதி சேர்த்திருக்கிறார்களே! அநியாயம்! அநியாயம்? இது செய்தி ஆங்கிலேயர் அறிவாரானால்...........?'' என்று ஹூசேன் சொல்லிக்கொண்டிருக்கும்போது மாபத்கான் ராஜாவை அணுகி அவர் காதில் ஏதோ சொன்னான். அவருக்கு ஆத்திரம் அதிகமாய்ப் பொங்கி எழுந்தது.

"ஏ! கொடிய விஷத்தையுடைய நாகமே! என்ன சொல்லினை? இந்த சங்கதியை ஆங்கிலேயர் அறிவாரானால்! என்னைச் சண்டைக்கிழுப்பார்கள், அல்லவா! இதைச் சொல்லி நம்மைப் பயமுறுத்த நினைக்கின்றனையோ? பேஷ்! இந்த சூழ்ச்சி வெளியான விஷயமும் நீ தண்டிக்கப் படப்போகிற விஷயமும் இந்த அரண்மனை வாசல் தாண்டப் போவதில்லை என்பதை அறி. மற்றவர்களும் உன்னைப்போன்ற இராஜ துரோகிகள் என்று நினைத்தனையோ. சீ, சீ, அப்பால் போ. என் முன் நிற்காதே பாதகா'' என்று கடிந்து கூறினார் மஹாராஜா. உடனே மாபத்கான் அரசன் செய்த சமிக்கை யறிந்து ஒரு உத்தரவிட்டான். பத்து படைவீரர்கள் ஆயுதபாணிகளாக உள்ளே நுழைந்தார்கள்.

அவர்களைக் கண்டதும் சிங்கம்போல் ஹூசேன் கம்பீரமாய்த் தலை நிமிர்ந்து யாவரையும் ஓர் பார்வை பார்த்தான். அப்போது அவனது கை அவனை அறியாமல் வாளை உறையினின்றும் உருவியது. யாவரும் சிங்கத்தைக் கண்ட நரிகள்போல் பதுங்கினார்கள்.

"ஜல்தி, ஜல்தி'' என்று உத்தரவிட்டார் மாபத்கான். உடனே அந்த பத்துபேரும் தங்களது கத்திகளை உருவிக்கொண்டு ஹூசேன் பேரில் பாய்ந்தார்கள். அவர்களுடைய உக்ரத்தைச் சிந்துவதற்கு ஹூசேனுக்கு இஷ்டமில்லை.

"ஓ! கத்திகளை உறைக்குள் போடுங்கள். நானே வந்துவிடுகிறேன். யுத்தம் வேண்டாம். உங்கள் உதிரத்தைச் சிந்துவதற்கு என் மனம் சம்மதியாது" என்று சொல்லிக்கொண்டே அவன் தனது வாளை வீசி எறிந்துவிட்டான்.

பிறகு எல்லோரும் சேர்ந்து அவனது கால் கைகளுக்கு விலங்கிட்டு சிறைச்சாலைக்குக் கொண்டுபோனார்கள். அரசாங்க சிறையில் வைத்திருந்தால் ஒரு வேளை அவன் களவ் துரையுடன் கடித சம்பந்தம் வைத்துக் கொண்டு விடுவான் என்று அஞ்சி பிறகு அவனை அரண்மனைக்குள்ளேயே உள்ள உயர்வான ஒரு கோபுரத்தின் உசசியில் சிறைவைத்து அதிகக் கடுமையான காவலும் போட ஏற்பாடாகிவிட்டது.

* * * *

ஹுசேன் மனம் பட்டபாட்டை எளிதில் சொல்லமுடியாது. தன்னை உண்மையாகவே சூழ்ச்சிக்காரன் என்று ராஜா எண்ணிவிட்டாரே, இனி அவர் என்ன ஆக்கினை செய்வாரோவென்று ஏங்கினான். இந்த சூழ்ச்சி செய்து தன்னை சிறைபிடிவிட்ட பாதகன் யாராய் இருக்குமோவென்று அவனுக்கு கண்டுபிடிக்க முடியவில்லை. லக்ஷ்மி பாய்க்கு ஏதாவது இதனால் தீங்கு நேரிடுமோ? அவளும் ஒரு வேளை தன்னை உண்மையாகவே சதிகாரன் என்று சமபிவிட்டால் என்ன செய்கிறது? என்று பலவித எண்ணங்கள் அவனைப் பாதித்தன.

மறுநாள் காலையில் இந்த செய்தி எல்லாம் குரூபியின் மூலம் கேள்விப்பட்ட லக்ஷ்மிபாயின் மனம் எவ்வாறு இருந்திருக்கும்? குரூபியின் பேரிலேயே அவளுக்கு பெருதத அவநம்பிக்கை உண்டாகியது.

# “ ஆனந்தபோதினி ” பஞ்சாங்கம்.

**தாதுஷு ஆடிமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,**
**பசலி 1346, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1355,**
**இங்கிலீஷ் 1936ஷு ஜூலைமீ—ஆகஸ்டுமீ**

| ஆடிமீ | ஜூலைமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [திரி, சர்வநதிரஜஸ்வலை |
| 1 | 16 | வியா | திர42-30 | மிரு40-33 | மா60 | பிரதோஷம், மாசசிவராத் |
| 2 | 17 | வெள் | சது39-28 | திரு39-20 | சித்60 | கரிநாள் |
| 3 | 18 | சனி | அ● 37-18 | புன39-8 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 4 | 19 | ஞா | பிர36-28 | பூச40-5 | சித்60 | சிராவண சுத்தம் |
| 5 | 20 | திங் | துதி36-53 | ஆயி42-18 | சி42-18ம | சந்திர தெரிசனம் |
| 6 | 21 | செவ் | திரி38-43 | மக45-50 | சித்60 | மது ஸ்ராவா [விரதம் |
| 7 | 22 | புதன் | சது41-55 | பூர50-48 | அமி60 | ஆடிப்பூரம், மாச சதுர்த்தி |
| 8 | 23 | வியா | பஞ்46-10 | உத்56-50 | ம56-50சி | நாக, கருட பஞ்சமி |
| 9 | 24 | வெள் | சஷ்51-33 | அஸ்60 | அமி60 | சஷ்டி, சூரிய சஷ்டி, ஹல |
| 10 | 25 | சனி | சப்57-28 | அஸ்3-50 | மா60 | கரிநாள் [சஷ்டி |
| 11 | 26 | ஞா | அஷ்60 | சித்11-8 | சித்60 | திருதினஸ்பிருக் [ண |
| 12 | 27 | திங் | அஷ்3-13 | சுவா18-15 | அ18-15ம | வியாதிபஸ்தர் மருந்துண் |
| 13 | 28 | செவ் | நவ8-20 | விசா24-38 | ம24-38சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 14 | 29 | புதன் | தச12-25 | அனு29-53 | சித்60 | ததி விரதாரம்பம் சீமந்தம் |
| 15 | 30 | வியா | ஏகா15-0 | கே33-35 | பி33-35சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 16 | 31 | வெள் | து15-48 | மூல35-33 | அ35-33பி | வரலக்ஷ்மி விரதம், சுக்ரன் |
| 17 | 1 | சனி | திர14-50 | பூரா35-53 | சித்60 | [மேற்கே உதயம் |
| 18 | 2 | ஞா | ச○11-58 | உத்34-35 | அமி60 | பௌர்ணமி, யஜுர் உபா |
| | | | | | | கர்மம், ஆவணி அவிட்டம் |
| 19 | 3 | திங் | பௌ8-18 | திரு31-50 | அ31-50சி | ருக் உபாகர்மம், காயத்திரீ |
| 20 | 4 (1936ஷு ஆகஸ்டுமீ) | செவ் | பிர2-58 | அவி28-50 | சி28-50ம | சிராவண பகு [ஜெபம் |
| | | | துதி56-48 | | | ளம், அருன்யசயனவிரதம் |
| 21 | 5 | புதன் | திரி50-0 | சத23-43 | சி23-43அ | சஜ்ஜாலி திரிதிகை, 9-க்குள் |
| 22 | 6 | வியா | சது43-5 | பூர18-50 | சித்60 | சங்கட சதுர்த்தி [மழை |
| 23 | 7 | வெள் | பஞ்36-18 | உத்14-0 | சித்14-0அ | |
| 24 | 8 | சனி | சஷ்29-53 | ரே9-23 | மா9-23சி | |
| 25 | 9 | ஞா | சப்24-50 | அஸ்5-13 | சித்60 | |
| 26 | 10 | திங் | அஷ்18-53 | பர1-43 | சி1-43மா | |
| | | | | கி✻59-0 | | |
| 27 | 11 | செவ் | நவ14-28 | ரோ57-13 | அ57-13சி | |
| 28 | 12 | புதன் | தச10-58 | மிரு56-13 | சித்60 | |
| 29 | 13 | வியா | ஏகா8-15 | திரு56-8 | மா56-8அ | |
| 30 | 14 | வெள் | து6-33 | புன56-55 | சி56-55மா | |
| 31 | 15 | சனி | திர5-45 | பூச58-40 | சி58-40மா | |

| | | | |
|---|---|---|---|
| | | | செ-பு சே |
| சனி | 5-கடக-புத 15-கடக-செ 19-சிம்ம-புத 21-சிம்ம-சுக் | | சூரி சுக் |
| ராகு | குரு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE “ANANDA BODHINI” PRESS.
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS